## வேறு.

சம்புமுனிதவம்புரியத்தகுஞானகேத்திரத்தி
னும்பர்தொழச்சென்றதற்பினுலகமெலாஞ்சிற்றின்ப
வம்புநெறியொழுகுறவிம்மாதுடனுஞ்கியநாமே
நம்புமுயிர்வீடணுகநல்யோகத்திருந்தனமால். (௩௨)

இளமைபெருங்கற்பொருவரெதிராதவெழிலொத்த
வளமையுறுமன்பனைத்துமங்கியிடப்பிரியாத
பிளவுமதிநிகர்நுதலிப்பெண்ணரசிதனைநோக்கா
தளவினெடுநாள்யோகத்தமர்ந்திருந்தவெமைநோக்கி. (௩௩)

அள்ளிலைவேற்கணநாதரருகிருந்தோர்பார்த்திருப்ப
வெள்ளனகைபுரிந்திட்டாளிவளதனால்விளைகின்ற
கள்ளவினைகழுவுவான்கதங்காட்டிநமைப்பிரிந்திட்
டுள்ளமுளந்திருத்தியெனவொருசாபமுறுத்தினமால். (௩௪)

இதுமுதல்(௧0) கவி சிவபெருமான்கொடுத்தசாபத்திற்குஅஞ்சிஅம்பிகை புலம்புறுதல்.

வெச்சென்றமொழிகேளாவெய்துயிர்த்துநடுநடுங்கிக்
கச்சான்றுமுலைத்தலைமேற்கனல்சேர்ந்ததிரிநெய்போன்
மைச்சென்றமலர்நீலவாட்டடங்கண்புனலுறைப்பப்
பச்சென்றவுடல்குழையப்பணிந்துமொழிகுவளானாள். (௩௫)

அடியவர்செய்திடுங்குற்றமாயிரமும்பொறுத்தருளும்
படியில்பெருங்கருணையனேபசுவேறும்பரமேட்டி
கடியவிழுநறுங்கொன்றைக்கண்ணியாகருநீல
விடமணிந்தகருமிடற்றுவிகிர்தாநின்சரண்போற்றி. (௩௬)

பேதைமையேபெருங்கிழமையிரண்டானும்பிழைசெய்தே
னுதலின்றெற்பெருங்கருணையடிகேண்மற்றடியேனை
யேதிலர்போற்புறக்கணித்திட்டிருந்துயரத்திடைமூழ்கப்
போதவிடலழகன்றுபொறுத்தருளாய்பொறுத்தருளாய். (௩௭)

தண்டரளப்புனற்பொய்கைதணந்தமலர்த்தாமரைபோல்
விண்டலத்துக்கதிவழுவிவிழுந்தபெருங்கடவுளர்போற்
கொண்டல்பொழிமழையொழிந்தகுளிர்பண்ணைப்பசும்பயிர்போ
லண்டர்தொழுமடிகளையானகன்றிருத்தலழகேயோ. (௩௮)

உயிர்நீத்தவுடம்பென்னவுணர்வொழிந்தவுயிரென்ன
மயிர்நீத்தமானென்னமணிநீத்தபணியென்னப்
பயிர்நீத்தகூலென்னப்பகனீத்ததினமென்னச்
செயிர்நீத்தவடிகளையான்றீர்ந்திருத்தலழகேயோ. (௩௯)

புலனுகராப்பொறியேபோறபூணணியாமடவார்போ
லலரணியாநீர்சிலைபோலாயணையாமகவேபோற்
பலன்விளையாநிலமேபோற்பண்ணுகாராப்பாடல்போ
னிலவுமடிகளையடியேனீத்திருத்தலழகேயோ. (௪0)

கொம்பரிலாவிளங்கொடிபோற்கொழுங்கனிலாந்திருமுகம்பேரல்
வெம்பரசிலாப்படைபோல்விரகினரில்லாவவைபோற்
பம்புமுயிர்க்குயிராகிப்பசுபதியாய்க்கணவனுமா.
மெம்பெருமானையுமடியேனிகந்திருத்தலழகேயோ. (சக)

ஆற்றரியபெருந்துயராலலைப்புண்டிவ்வாறுரைத்துக்
கோற்றொடிக்கைமடமாதுகுழைந்துருகியவசமுற
மாற்றுதினன்னவலத்தைமாழ்கலைமாழ்கலையென்னத்
தேற்றியவண்மனங்குளிர்ப்பத்திருவருளாலிதுகிளந்தாம். (சஉ)

சின்னுளிங்கெமைப்பிரிந்துதிகழ்ஞானசேத்திரத்தின்
மன்னுநின்றருந்தவத்தின்மனம்வைத்துநமைப்பூசை
துன்னுர்வத்தொடும்புரிந்துசூழ்திதமியாகியநீ
பின்னுமெங்கருள்வழுவவெமியாவைபேணென்றும், (சங)

நவின்றவருண்மொழிகேளாநந்தியெனுரியற்பெயரோய்
கவன்றகவலைபிற்சிறிதுகையகன்றுமேதாத்திரங்க
ளுவன்றுபிழையாலெழுந்தநோன்மையுறநாணிஞெடுங்
துவன்றுமடிவாய்திறந்துமற்றிதுவுஞ்சொலவலித்தாள். (சச)

இதுமுதல் ச)கவி அம்பிகைசிவபெருமானைவணங்கித்தோத்திரஞ்செய்தல்.

## வேறு.

தண்ணங்கமலத்தயனுகனையான்சதமாமகஞ்செய்திமையார்க்கிறையாய்
நண்ணுங்குலிசப்படையானமரர்நவில்விஞ்சையர்கின்னரர்கிம்புருட
ரெண்ணுங்கணநாதர்கணந்துறவோரெவரும்வதிவுற்றிருமைப்பயனு
மண்ணும்பெருமைத்தடிகேளுயரிவ்வணியார்கயிலாயமலாலிலையே. (சரு)

அதுமாத்திரமன்றுலகத்துறைவோரனைவோர்களுமன்பலர்நெஞ்சினராய்
துதிபாடியுமாதிரநோக்கியெதிர்தொழுதுந்தொலையாமையுளத்திடையே
யிதுவாலிதன்வண்ணமெனப்பதிவிததிட்டெம்பயனெய்துவதும்பெருமான்
முதிர்பேரொளிகான்றிருள்சீத்துநலமொய்க்குங்கயிலாயமலாலிலையே. ()

ஒப்பாருயர்வாரையிலாய்வதியுற்றுயர்கின்றனவன்றுகொலெத்தலமு
மப்பேரருளுயகனியொழியாதமரும்பெருமைத்துயருங்கயிலை
யப்பூதரம்விட்டெனைஞானதலத்தேசென்றருள்செய்ததுமெம்பெருமான்
றுப்பார்திருவுள்ளவெறுப்பெனவேசூழ்ந்தச்சமொழிந்திடதென்னுளமே.()

அடியேன்மதியாமையினைத்தபிழையகலுங்கழுவாயெனமாதவமு
முடியாதவின்பூசனையுந்தகவேமுற்றும்பலநாளுமிடமாமலைவாய்க்
கடியாதுபுரிந்தமர்வேனிதுவேசைக்கொண்டிடுமாறுகடைக்கணியென்
றொடியாதவுளத்தெழுமன்பினளாயுரைத்தாள்பனிமால்வரையுத்தமியே. ()

## வேறு.

இதுமுதல் (ரு) செய்யுள்சிவபெருமான் நந்திதேவருக்கும் அம்பிகைக்கும் திருவானைக்காவின் மகத்துவங்கூறல்.

நந்தியினனமோதுநாயகிக்கிதுசொற்றுஞ்
சுந்தரிகயிலாயத்தொல்வரையிதிற்பன்னு
ணந்தியதவமெல்லாநாழிகையொன்றதனில்
வந்திடுமுயர்ஞானவைப்பிடையதுவன்றி. (சகூ)

ஞானமுனிக்காங்குநவிற்றியதினைத்திட்டா
ஞானநல்குருமேனைநற்றலமுளவேனு
ஞானவைப்பெனுநாமந்தனக்கலதில்லாத
ஞானவைப்புயர்ந்தன்றேனற்பயனுநிந்தற்கே. (ருo)

ஆங்குறுங்காலந்தானனுகிலததுகாறு
மீங்குறைகெனமுன்னேயியம்பினமாங்கெய்தும்
பாங்குறுபாணியுமிப்பாணியல்லதையில்லை
தீங்கறுநந்திதெளிகென்றனன்சிவபெருமான். (ருக)

அருளியவருடலைவைத்தருள்வளர்தருநந்தி
பெருகியகளிகூரப்பேசியஞானதலத்
யானித்தங்குறைந்தனனினியிப்பாற்
(ருஉ)

உருக்கிளர்புரமூன்றுமொள்ளழற்குணவாக்கும்
வெருக்கிளர்மாமேருவில்லினரிசோப
முருக்கவுமெய்ஞ்ஞானமுற்றவுமெம்பெருமான்
றிருக்கிளர்பூசனையிற்றிருவுளம்பற்றினளால் (ருங)

சம்புமுனிதவம்புரிபடலம்முற்றிற்று
ஆ திருவிருத்தம் - ருகூஉ.

## அகிலாண்டநாயகியாராதனைப்படலம்.

சிவபெருமானை அம்பிகை வணங்கிக்கொண்டு திருவானைக்காவிற் கெழுந்தருளுதல்.

பொன்பூத்துமணிதுறும்பிப்பொங்குமருவிபலவார்ந்து
தென்பூத்தவிமையவரைச்செல்வமடந்தைதிசைவிளங்குங்
கொன்பூத்தபுகழ்க்கயிலைகுடிகொண்டிருந்தகொண்கனிரு
மின்பூத்தமலரடியின்விரையார்மலர்தூய்ப்பணிந்தெழுந்தாள். (க)

பூதசமாதேவபுலவுநாறுஞ்சூலத்த
வாதேயவாதாரமனைத்துமானபிராலம்ப
மாதேசின்வளர்ஞானவைப்பிற்கேகவொருப்பட்டே
னீதேசநலனெய்தசிகரில்விடைதந்தருளென்றாள். (உ)

சிவபெருமான் அம்பிகைக்குத் தானும் வருவதாய் அருளளித்தமை.

நஞ்சேந்தியமுதளித்துநாமவடவாமுகத்தீயி
னெஞ்சாதசெவ்வரிகொண்டிருநீர்பெருக்கிக்கடல்போலுந்
துஞ்சாதவிழிமடவாய்தோலாச்சிறப்பினெடுஞ்சேறி
யஞ்சாதியவண்வருதுமென்றாரகிலகாரணரே. (ங)

வேறு.

இதுமுதல் (அ) செய்யுள் அம்பிகையின் சேனைமுதலிய சிறப்புக்கூறல்.

விடையவன்றிருமுன்றாழ்ந்துவிடைபெற்றமாதுகோயிற்
கடைமணிவாயிலெய்தக்கண்ணுதலேவலாற்று
முடைமணிச்சுரிகைநந்தியொய்யெனமுன்னரேகிப்
படையொடுமுடன்செல்கென்றான்பாரிடத்தலைவர்க்கம்மா. (ச)

அருடலைக்கொண்டுவெல்லையருங்கணநாதர்சில்லோர்
வெருவருதோற்றஞ்சான்றவிறற்பெருங்கணத்திற்றெருக்கார்
பொருவருமாயனுதிப்புவுவர்கணெருங்கித்தாழ்ந்தார்
வருசயைவிசயையாதித்தோழியர்மருங்குசூழ்ந்தார். (௫)

வாரணிமுரசமார்த்தவால்வளைநரன்றவீணைக்
சீரணியெழாலின்பாடல்செவியெலாமினிமைசெய்த
வாரணமுழக்கஞ்சான்றவடியவர் துதிகண்மாண்ட
காரணிவிழியின்மாதர்கலாயெதிராடினார்கள். (௬)

மாலைகால்பாத்தபிச்சமதிக்குடைதுவன்றிச்சூழக்
கோலமாராலவட்டங்குளிர்செய்சார்தாற்றிவாய்ந்த
பாலவாயசைத்துநிற்பப்பாளிறச்சவரிதுள்ளச
சீலமார்கொடியினீட்டஞ்சேண்வெளிமுழுதூர்ந்தூர்ப்ப (௭)

குறுகுறுநடந்துசெல்லுங்குறளொடுசிந்துமுந்த
வறுவகைப்படையுட்டஞ்சவாளுடைதாங்குமாதர்
கொறுகொறுத்துடலும்வைவாள்குடங்கையினேந்திமொய்ப்ப
விறுகிடைப்பேடிமாருமொருபுடையீண்டிச்சூழ. (௮)

பூவைபுங்கிளியுமற்றும்பொற்புறக்கூட்டினேந்தி
மாவடுவெகிர்க்கண்மாதர்சிலரொருமருங்குபோற்றத்
தேவர்கள்சில்லோர்யூகந்திரிமருப்பிரலைமற்றுந்
தாவுறுந்தொடரினோடேந்தடங்கரம்பற்றிச்சார. (௯)

கஞ்சுகமணிந்ததேவர்கைத்தலம்பிரம்புதாங்கி
வெஞ்சொன்மிக்குரைத்துமுனனமிடைசனத்திரளைநீக்க
வஞ்சலிபுரிந்துசூதமாகதருருகுநிற்ப
வெஞ்சலிலாதவேனைப்பணியினர்யாருமீண்ட. (௧௦)

ஆணிப்பொன்னடர்மேல்வேய்ந்திட்டசும்பொளிதிசைகள்போர்ப்ப
மாணிக்கநிரையுமுத்தும்வயிரமுந்தூக்கியிட்ட
வேணுற்றவிமானநண்ணவிறைவனைமனத்துளெண்ணிப்
பூணுற்றகொங்கையன்னைபொருக்கெனவிவர்ந்துசென்றாள். (௧௧)

அம்பிகை மற்றுள்ள தலங்களைத் தரிசித்தல்.

நெறியிடையாங்காங்குள்ளநிறைமணிக்கோயில்சார்ந்து
முறிவளர்மேனிநல்லாணமுதல்வனைவழிபாடாற்றி
யறிஞர்கள்வந்துதாழவவரவர்க்கருளிச்சென்று
செறியொளிஞானபூமிசேணிடைத்தோற்றக்கண்டாள். (௧௨)

அம்பிகை திருவானைக்கா எல்லைக்கு வந்தமை.

மண்ணிடையிழிந்துபாங்கிமார்கொணர்ந்தளித்தபோதங்
கொண்ணிழற்கடகச்செங்கையொய்யெனவாங்கித்தூவிக்
கண்ணிறைந்திமையிற்றூங்குங்கதிர்முத்தஞ்சிந்தத்தாழ்ந்து
பண்ணிறைதுதிகளார்த்திப்பைப்பயநடந்துசென்றாள். (௧௩)

அம்பிகை காவிரி ஸ்நானஞ்செய்தமை.

விரோத்மொன்றானுமின்றிமிருகமும்பயிலாநின்ற
வரோகமேயருஞ்ஞானபூமியினவதியுள்ள
குரோசமைந்தையுஞ்சூழ்போய்க்குறுகுவாள்கோலமார்ந்த
வரோதயுப்பொன்னிநீத்தமரபுளித்தோய்ந்துள்புக்காள். (௧௪)

இதுமுதல் (௬) கவி அம்பிகை திருவானைக்கா வளப்பங்காண்டல்.

உடங்குறுசேனையாங்காங்குறுவகைசிறுவிச்செல்லுந்
தடங்கணுளிரண்டுபோலுந்தவழ்தருபொன்னிவீசு
மடங்குருக்கதிர்செய்முத்தும்வயிரமும்பொன்னுமற்று
மிடங்கெடக்கிடந்துபோகபூமியினிமைப்பக்கண்டாள். (௧௫)

கடலுவர்பருகுந்தீமைகையகல்பாக்குச்சார்ந்து
பட்டலைமுகிலேற்றன்னபசும்பொழிலுடுத்தசூழ
லிடவியதீர்த்தமாடுமிபக்குழாமனையம்மேக
மடனறத்துதித்தாலென்னமகிழ்ச்சியின்முழங்கக்கண்டாள். (௧௬)

மலையவெற்பிடையேதோன்றிமாதவனகத்தியன்பாற்
றொலைவறப்பழக்கஞ்சான்றதூக்குணந்தெரிக்குமாபோ
லலைதவழ்தீர்த்தமாடியலர்மணங்கவர்ந்துமெல்லென்
றுலவுசெய்வருத்தநீங்கத்தென்றல்வந்துலாவக்கண்டாள். (௧௭)

அகிலமுமுயிர்த்ததாயேயடுத்தனளென்னுமோகை
மிகுதலிற்பாடலாடல்விளைத்திடுந்திறமேயென்னத்
தொகுகுயில்பூவைகிள்ளைதும்பியுமிசைப்பத்தோகை
யிகவறுவனப்புத்துள்ளவிடந்தொறுமாடக்கண்டாள். (௧௮)

தருவுருவாகஞானதலத்திடைப்பிறந்தாமேனுந்
திருவினைப்பெறலாமென்றுதேவருமிறும்பூதெய்த
மருமலர்தூவித்தாருமதுப்புனலிறைத்துத்தெய்வ
முருகெதிர்விடுத்துத்தாழமொய்யருள்வழங்கக்கண்டாள். (௧௯)

கங்கையீரைந்துதோன்றுங்கையினுள்கமலபாத
மிங்குநாமணையப்பெற்றுமெனமகிழ்சிறந்தாலென்னப்
பொங்கிவெண்டரங்கக்கையாற்புனல்வளர்தீர்த்தமெல்லாஞ்
சங்குயிர்முத்தந்தூவித்தாள்பணிந்தேகக்கண்டாள். (௨௦)

கருப்புவில்லோடுநம்மைக்கைத்தலந்தாங்குமன்னை
திருப்பொலிபாதநோதல்சிவனுமேயென்னப்பூவிற்
சுருப்பினங்குடைந்துவாசசுண்ணநுண்டாதுவீழ்ப்ப
வருப்பிளமுறுவல்கோட்டியலர்விழிகுளிர்ப்பக்கண்டாள். (௨௧)

இருந்தருந்தவங்களேற்குமிருடியர்பாவமுற்றும்
வருந்திமண்விழுந்தோட்டந்தான்மானவானிழன்றநாவற்
கருந்திரட்கனிகள்சிந்தியுடைந்துகால்கொண்டசாறு
விருந்துணச்சுரும்பீட்டம்விரைந்தெழுந்தோடக்கண்டாள். (௨௨)

தொடுக்குமன்புடையகாந்தனுகியசோமனேற்ற
துடுக்கணமறிந்துதாமுமொண்டவம்புரியுமாபோ
லடுக்கியவுலகுக்கெல்லாமரும்பெரும்பொருள்களுண்கும்
கொடுக்கியவளர்வெண்ணுவற்குருஉக்கனிமிளிரக்கண்டாள். (௨௩)

அம்பிகையை அங்குள்ள தவத்தோர் வணங்கல்.

இத்தகுஞானபூமியிருந்தபேறிணிவேறென்னே
யுத்தமிபுமையாள்காட்சியுதவிடப்பெற்றுமெனா று
மெத்தியவன்புபொங்கவிரதியரெதிரேசென்று
கைத்தலங்கூப்பித்தாழ்ந்துகண்பனியுறைப்பக்கண்டாள். (௨௪)

அம்பிகை கைலையினின்று நீங்கிய வருத்தநீங்கி ஆனந்தமடைந்தமை.

இன்னபல்வளங்களோக்கியெய்தியோர்தருவின்மூலந்
துன்னிநின்றடுத்ததோழிச்சுனந்தையைநோக்கிமுக்கண்
மன்னனைப்பிரிந்தாமேனும்பிரிதாமகிழ்வேபெற்றாந்
தன்னிகரில்லாவிந்தத்தலம்புகுமாண்பாலென்றாள். (௨௫)

அம்பிகை வருமுன் தவம்புரிந்த பிரமதேவன் அம்பிகையைப் பூசித்துத் தோத்திரஞ்செய்தல்.

அரதநத்தசும்பைவென்றவருப்பிளங்கொங்கையன்னை
வரவினையறிந்துமுன்னேவதிந்துமாதவங்களாற்றும்
பிரமன்வல்விரைந்துசென்றுபெருகியவன்போடச்சம்
விரவமுன்பணிந்துபூசைவிதியுளிப்புரிந்துபோற்றும். (௨௬)

இதுமுதல் (௩௫) செய்யுள் அகிலாண்டநாகி அவயவவருணனை.

கூந்தல்.

இருசுடரெதிராதெழிலியோரியல்பினிராதுதண்டலைமுடிகூடா
கருமணலொழுக்குநீவதில்லாதுகதித்தசைவலம்புழுகளையா [மே
வுருவளர்கொன்றைகமுகுமெல்லென்றுமெனவிவையொழித்தியன்மண
மருவிமெய்யடியார்மலவிருட்செறிவுமடிக்குநின்பூங்குழல்போற்றி. (௨௭)

கூந்தலிலணிந்த முத்துக்கள் முல்லைமலர்கள். [ன்

கருந்துணர்க்கடுக்கைக்கண்ணியான்முடியிற்கலந்தனனமக்கெலாங்காந்த
முருந்திளமுறுவற்றேவிபானமக்குமுறையெனமுதிரொளியுடுக்க [மூந்
ளருந்தவத்திறைகொண்டிருந்தனபொரூஉமன்னணிகுழற்றாக்குறித்தில
திருந்தியமுல்லைத்தெரியலுஞ்செருகுஞ்சின்னவெண்மலர்களும்போற்றி. ()

திலதம்-நெற்றி.

இலகொளிமணிச்செயிலம்பகந்திருத்தியெறிகதிர்மகரவாய்பொறித்த
திலதமேலிடத்துச்செங்கதிர்தொடர்ந்தசேயொளியரவெனநாற்றிக்
குலவமரடைப்பிற்புறந்தருநீர்மைக்கொடுமரநாணுறவொளிவாய்ந் [போற்றி
துலவுறுமெண்ணண்மதியும்வெண்ணிறமென்றொழிக்குநின்வாணுதல் ()

புருவம்.

காமனுருருவங்கனற்கணுற்பொடித்தகணவனார்திருவுளம்வணக்கு
நாமவாளிகளோரிரண்டெனமிளிர்ந்தநறுமலர்நயனமீமிசையே [உன்
சேமவார்சிலையுஞ்செருச்செய்வார்சிலையுஞ்சேர்ந்தொருங்கிருந்தனபொரூ
னேமவார்புருவம்போற்றியிப்புருவத்தெழின்மயிரொழுக்கமும்போற்றி. ()

கண்கள்.

மாசிலீம்விளக்குஞ்சுடர்க்கொளிகொடுக்குமகிழ்நனார்விழிச்சுடர்மூன்று
மூனமில்காதலுளத்தெழவணக்கியொளிர்தருவதனமாமதியந்
தானழகெறிப்பமணந்தவுற்பலமோதணணமிழ்துணவுடனடுத்த
வீனமில்சகோரத்துணைகளோவென்னவிருந்தநின்கண்மலர்போற்றி. ()

நாசி.

கண்ணளியடுத்துநன்னிறம்வாய்ந்துகதிருமிழ்மணியணியணிந்து
தண்ணெனவியற்கைநறுமணமுயிர்த்துத்தழைந்துவாடாதசண்பகத்தை
யெண்ணறுமலரைக்குமிழினைக்காமருபியையகல்கெடப்பொருது
வண்ணவார்கொடியின்வயங்குநின்னாசிவளரொளித்திருவெழில்போற்றி.

### இதழ்.

இந்திரகோபங்காரொடுமொழியவிருங்கிடைநீரொடுங்கழியச்
செந்துவர்வர்நீர்க்கடலொடுமறுகச்செம்மலரிலவொடுமுருக்கு
நந்தியனைனறேங்லனறத்தொண்டைநறுங்கனிதூங்கிநினறழிய
வந்தமிலமிழ்தம்பொதிந்தொளிதுளும்பியணிகிளாவாயிதழ்போற்றி. (௫௫)

### வாய்.

செய்யதாமரைதணைபணிக்குமுற்றழிந்துந்திங்கணமுன்றிகழநலமொழிந்து
மையளாங்கணணியொருத்தியைச்சுமந்துமன்னுமுடடாளதாபனீறும
பொய்யதாய்க்கழியகுமுதமுமெனறூழ்ப்புலவணமுமெனமுநலஞ்சாம்ப
மெய்யவாம்பொருளகளவிளைததருள்கொழிக்குமவிமலநின்செய்யவாய்
[போற்றி

### தந்தம்

முருந்திளஞ்சாயற்குடைந்தமஞைஞயதாயமுளைததன்னுடன்பிரியாமற
திருந்துருக்காட்டாசசெயிரதாயொழியதடெளளொளிசிததிலமவிலைப்பட்
டருந்திறற்காப்புற்றுட்புரைநாணுறறலையவெணமுலலைநெக்குடையப்[ற்றி
பொருந்துதணணமிழ்தமூற்றிருந்தொளிகாலபொழியுநின்மணிநகைபோ

### வார்த்தை

சிறைபடுபூவைகிளளையுமொருவாதேமொழிபயிற்றிடப்பயிலவ
வறைகுயிலெழுத்திலுமொழியறியாதருஞ்சுவையாழ்சுதந்திரமன்
றுறைசெயதேன்செழுமபாலமிழதமுஞசெவியினபுருவெனவிவையெலா
நிறைசுவையினதாயதன்னையேநிகாததுநிகழுநினகுளிாமொ[மொழித்து
ழிபோற்றி. (௫௬)

### கபோலம்

ஒப்பறுமுதல்வனுகியகணவனெளிமுகத்திருவெழினோக்கத
திப்பியமாகவிளங்குகணணடியோசிவபிரானறிருவுளககமல [ள்
மெப்பொழுதினும்பூததலருநீாநிலையோவெனததிகழநதிருஞசெவியணிக
செப்பருங்கதிர்ரஞசனமபுரிபததிருநதுநினகவுட்டுணைபோற்றி. (௫௭)

### செவி

மயிரொறிகருவிதனதிழிதொழிலைமதிததுமஞசிகனுறைதுங்கப்
பயிலுறும்வள்ளைகொடியதாயப்புனலிறபடியவாருசனினசெவியி
னியலருளெனநிறசுமர்தெழுநதாடவெழிலகுலாயககாவிமேலணிந்து
செயிரறுமணிப்பூங்குழையொடுதோடுசெறிந்தநின்செஞ்செவிபோற்றி. ()

### முகம்

ஆரணங்கடந்தவருட்பெருங்கடவுளகமெனுநதாமரைமலரப்
பூரணவொளிமிக்கெழுதலாலிருளைப்புரட்டுசெங்கதிரவனேயோ
காரணங்கடந்தகணணுதலவதனக்கதிரவன்முனமலர்தலினுற்
சீரணிகமலமலர்கொலோவெனனததிகழ்ந்தநின்றிருமுகம்போற்றி (௫௯)

### கழுத்து

பாளையுட்பொதிந்துதிரண்டபூங்கமுகின்பாசொளிக்கணடமோநிலையா
கோளறுதரளங்கொழிதொளிாசங்குகுழகனோர்திருவுளமகிழ
வாளுமென்புள்ளின்குரலொடுமமிழ்தமளவளாய்மங்கலநாணும்
வாளுமிழ்கலனுமுறுவெனவிலக்கிவயங்குநின்கந்தரம்போற்றி. ' (௬0)

தோள்.

மழலைவண்டிமிருந்தொடைலசிர்சிதையவாரணைவாய்கலைடப்புண்ணா
புழவுவள்வாரின்பிணிப்பினுலிரங்கமுங்கில்களினத்தொடுமுரிஞ்
பழவிடையவியாகிருப்பினுமங்கோவநுபயனைய்துழியழியத்
துழவொளிச்கதிர்ப்பூணங்கதமணிந்துதுலங்கியதோளிணைபோற்றி. (௪௧)

முன்னங்கை.

வலைவரமபரிந்தகாளையாட்சசேர்ப்பர்வண்குடிமகிழ்கொளத்தோன்றி
மலைவரம்பறிந்தமகரமீன்படுத்தவன்பனுரங்கையிற்பற்றி
விலைவரம்பிகந்தமணிவளைகடகம்விற்செறிகங்கணமணியக்
கலைவரம்பிகந்துமகரமீன்யாழுங்கடந்தநின்கூர்ப்பரம்போற்றி. (௪௨

உள்ளங்கை.

தங்குபன்மலர்க்குமருங்கலமான தாமரைநாண்மலர்குவித்து
மங்கநன்றும்வைபமலர்ந்திபுந்திரியுமலங்கொளிச்சுடர்கணைமைபரப்பச்
சங்கையையணிந்தகண்ணுறுதல்வதனச்சதிர்விழிபுதைத்திசைதோற்றப்
பங்கயமலரைக்காந்தளைத்தநகைப்பாற்றுமன்செங்கரம்போற்றி. (௪௩)

விரல்-நகம்.

கருப்புவிற்குழைக்குங்காமவேளடுத்தகணையனுமுற்பலமுகிழைப்
பொருப்புவிற்குழைத்தபுண்ணியன்விழையப்பொலிந்துநேர்பெறுதெனவி
கிருப்பொலிசெங்காந்தள்விரல்போற்றிசித்தசன்றேர்க்குவாம்பரியா[லக்கித்
யொருப்படுங்கிள்ளைசெய்யவாய்விளக்கியொளிருநின்விரலுகிர்போற்றி ()

தனம் இம்மதுசத்திகூறெனப்பொருள்கொள்க

கடகரிமருப்புமத்தகத்துணைபுங்காமருசெப்பும்பொற்குடமுங்
தடவரைக்குவடுந்தாமரைமுகிழுஞ்சக்கரவாகமும்பந்துஞ்
சடர்மணிவடமுங்கலவையுமழித்துந்தொய்யிலுங்கலந்தழுதேச
ரிடமியமார்பங்கலத்தல்செய்பாவென்றிகந்தநின்னிளமுலைபோற்றி. (௪௫)

இதுவுமது.

பருப்பவிர்பருவத்துறுகுமர்சொந்த்துமுறுகுளிர்ப்பருவத்துவெம்மை
விருப்புறவளித்தும்புணர்ச்சியற்புளகம்விரவியுமேனையோர்குயமு
மிருப்பனவெனினுமகந்துலகின்றுயிளைபநீங்காதுமாமேருப்
பருப்பதங்குழைத்தார்பகட்டிரங்குழைத்தபயோதரத்தின்னியல்போற்றி. ()

தொய்யிலுந்தேமலும்.

முழுத்தபேரன்பிற்காந்தனுர்மணிததோண்முயங்கியவேலையுமுயக்கம்
விழுத்தவேலையினும்வேறுவேறுருவாய்வெங்கையினறுமலர்த்தாதும்
பழுததவாடகப்பொற்பராகமும்விளக்கிப்பன்மணிசரைததிலேகிதத
வெழுத்திறைபொலிந்தவிளமுலைமுற்றத்திணங்கியசுணங்கெழிற்போற்றி.

வயிறு.

புவனரயடக்கிமாவொருவனையேமுற்றுறச்சுமந்ததோராலின்
மேவுபசிலையும்விலக்கியண்ணுந்துவிளங்கியமுலைமுகடுருவித்
தாழ்வடமணியினிளவெயிற்பிழம்புந்தடங்கியபதம்பமேகலைய [றி.
ஞெவில்பல்லொளியும்விராய்க்கிடந்திமைப்பவொளிருதரத்தெழில்போற்

வயிற்றின் மயிரொழுங்கு.

மாந்தளிர்மருட்டுங்கரதலத்தெடுத்தவார்கழைக்கருப்புவில்விசித்து
மேந்தெழிற்சுருப்புச்சேமநாணென்றேவிறந்தவேளெழவளருந்திக் [து
காந்தழற்குண்டத்தெழும்புகைக்கொழுந்தோகண்ணொழுதஞ்சனம்பிழைத
வீழ்ந்தொழுகியதோவெனவயற்றெழுந்தமென்மயிரொழுக்கெழில்போற்

 [றி.

மடிப்புஉந்திச்சுழிமேகலை

நிரஞ்சனப்பொருளாயிருந் தருள்கணவர்நெஞ்சுகண்ணினுங்கலந் துலாவு
முரஞ்சொளிவனப்புப்பெருங்கடற்பரப்பின் முரிதிரையெனவயிற்றெழுங்
வரஞ்செறிமடிப்புமதன் சுழியென்னவயங்கியவுந்திபுமாங்கே [கும்
புரஞ்செறிமணிகள்கிடந்தெனதயம்பத்தொளிர்தருபருமமும்போற்றி. ()

இடை

கடிமலர்க்கொம்பர்சொடியலர்தூற்றுங்கைப்பிடிமின்னிவைநிலையா
துடிகடைபட்டதராவிடமுமிழூந் தூயநூல்பலவினைப்படுஞ்சீர்
முடிவறுமடங்கல்சிம்புளுச்சுழியுமெனவினைவமுனிந்துமொய்ச்சரப [றி.
வடிவுகொள்கணவன்மனமெலாம்வணங்கவணங்குநின்னிடுகிடைபோற்

ரதம்பம்.

காமவேளெரித்தகண்ணுதற்பரன்கருத்தினைவணக்கிமேக்குயர்த்த
வாமமாருரோமவல்லியென்றுரைக்குமணிக்கொடியசைவறநாட்டு
மேமமாருந்திக்குழிமிசைத்தாயவரிமணிவிதானஞ்செய்பொலந்தே
ராமனுவடங்கள்கிடந்தொளியசுப்புமழகியகடிதடம்போற்றி. (௩உ)

துடை.

பிணர்படுவடிவினுட்புழைபுடையபெருங்கைசேற்றிருநகரமிகந்து
வணர்நெடுவாளாற்றுணிடக்குறைத்துவரிசையினுரிந்திடப்பட்டு
திணர்வனப்பிழக்குங்கதலியைநீக்கிபூன்மணியகாவாய்செறித்துத்
துணர்படுமாவினிளந்தளிர்ப்பட்டிற்றுலங்குநின்சவான்றுணைபோற்றி ()

முழந்தாள்

பொற்பமர்பொன்னங்கிழிபுடைபடுவபூந்திரட்பந்தடிபடுவ
விற்பமர்ஞெண்டுபங்கமுற்றலையுமரபினவெனவெலாமொழிதந்த
தற்பரன்கரத்தாற்பிசைதொறுமகிழ்ந்தாந்தண்யொன்றுமெய்தாமே
யற்புதமானவியற்கைநல்லழகினமர்முழந்தாளிணைபோற்றி. (௩௪)

கணைக்கால் பரடு.

சிலம்புகிண்கிணியபாதசாலங்கள்செழுமணிப்பாடகந்தண்டை
யலம்புறவணிந்துபுலவியிற்கணவனனங்கையோடமர்சிறிதாற்றிச்
சலம்படுவராலுமாவநாழிகையுந்தணித்துவாழ்ந்தொளிர்கணைக்காலும்
பலம்படுதராசிற்றட்டினைத்தூக்கிப்பதித்தநின்பரடுநேர்போற்றி. (௩௫)

குதிங்கால்

பெண்ணுருவெடுத்துநின்னருட்கணவன்பெருப்புயம்புணர்ந்தமாயவனி
னண்ணுருகர்ப்பமீலுருவெடுத்துக்காதிடப்பட்டிதற்கேனு [ன்
நண்ணுருவெடுத்துச்சார்த்துமென்றெண்ணிநலத்ததுவெடுத்தகூர்மமுமாங்
கெண்ணுருவழியவென்றிகொண்டிலகுமெழிற்புறந்தாளிணைபோற்றி(௩௬)

பாதம் விரல நகம்.

தொண்டையங்கனிவாய்த்திருவெழிற்குடைந்ததுவர்சிறவித்தருமத்தின்
கண்டழுங்குவிர்வெண்ணசையெழிற்குடைந்தகதிர்பொழிதரளமுமெமை
தொண்டுகொண்டருளல்வேண்டுமெனரடியைத்தொடர்ந்துகொண் [யுந்
மண்டெழில்கொழிக்குமவ்விரற்றலைய்ன்வயங்கியநகம் [டனையமெல்விரலு
[களும்போற்றி. (௩௭)

உள்ளங்கால்.

வந்தெதிர்பணியும்வானவர்சிரத்துமற்றவர்செய்நாவிடத்துஞ்
சிந்தையினிடத்துமறைமுடிவிடத்துந்திசம்தருபுலவியின்முக்கட்
சுந்தரனலங்கல்வேணியினிடத்துந்துலங்குறத்தோற்றிநாயடியேன்
புந்தியினென்றுநீங்குதலறியாப்பூந்தளிர்ச்சீரடிபோற்றி. (௩அ)

நடை

பயிலியவுலகம்படைப்பவனூர்தியாகியபடர்சிறையனமு
மயினுதிநெடுவேலவண்ணலரூர்தியாகியமயிலுஞ்சிறசுமந்து
செயிரறுமயிராவணமுநேர்பணிந்துதிகழ்நடைத்திருந்தவேசறப்பல், [றி
லுயிர்களும்வேதநெறியுளியொதுங்கவொதுங்குமின்னடையெழில்போற்
றொகுத்தவடிவம்.

எழுதருமறையுமெடுதற்கரிதாய்லகியானெழுதிடப்பட்டோ, [யலு,
ரெழுதுசித்திரமுநகைசெய்பாவையும்வீழ்த்திளந்தமார்கவற்றுமெல்லி [ன
மெழுதுயர்மஞ்ஞைக்குறுத்துசாயலுங்கொண்டெளியனேன்சிரத்துநீமுன்
ரெழுதியவெழுத்துந்துடைக்குமின்வடிவத்திருநகவின்முழுவதும்போற்றி

அகிலான்டநாயகியென்னுநாமத்திற்கு.

நீடியபரையாயாதியாயிச்சைநீக்கமில்லறிவிருந்தொழிலாய்ப்
பீடியலுலகிற்பேதமும்பேதாபேதமும்பேதமுமெனக்
கூடியுங்கூடலின்றியுமொன்றாய்க்குறுகியவுயிர்க்கெலாஞ்சுகமே
நாடியமுத்தியளருகிலாண்டநாயகியெனும்பெயர்போற்றி. (௬௧)

வேறு.

மானேகுயிலேபசுங்கிளியேமயிலேபுறவேநடையனமே
தேனேயமுதேசுனைமீங்குத்தெரிசித்தேத்தப்பெறுதலினால்
பானேபெரியதவஞ்செய்தேன்யான்செய்தவமும்வேள்வியுமிங்
கியானேபயந்திடப்பெற்றேனெனக்கோர்குறைபுவியியுண்டோ. (௬௨)

மறையாகமத்தால்வானவரான்மாலாலறியப்படாதநீ
முறையோவிவ்வாறெளிவந்ததென்னேமொழியாயெனத்துதி
குறையாவன்பின்விழுமின்றகுருமாமலரோன்முகநோக்கி
நறைவார்மொழுகுமலர்க்கூந்தனங்கையிதனைவிளம்புமால். (௬௩)

அம்பிகைபிரமதேவனுக்குத்தான்வந்தவாலாறுரைத்தல்.

அனகன்கயிலையெம்பெருமானடிகள்வணங்கிப்பொருளொன்று
வினவினேற்குஞானதலமேவித்தவமாற்றுதியாநகே
யினிதுவிரித்துத்தெரித்துமெனவியம்பிவிடுப்பவீங்கடுத்தேன்
கனகமலர்மெல்லணைச்சேக்குங்கடவுளறிதியெனக்கிளந்தாள். (௬௪

சம்புமுனிஅம்பிகையைவணங்கஅவர்க்கனுக்கிரஞ்செய்துவிட்டுச்
சிவபூசைக்காரம்பித்தல்.

சாற்றுமளவில்யோகிருந்தசம்புமுனிவனுணர்ந்தெழுந்து
போற்றிப்பணிந்துமகிழ்தூங்கப்பொங்குநகருணையெதிர்யழங்கிக்
கீற்றுமதியமுடிவேய்ந்தகேள்வருரைத்தவருணினைந்து
தோற்றுமுழுவலன்பினெஞ்சிற்தூயபூசைதொடங்குவாள். (௬௫)

இதுமுதல் (௩௪) செய்யுள் அம்பிகை சிவபெருமானைப்பூசித்தல்.

பாங்கர்மின்றபரிசனத்தைநோக்கிப்பள்ளித்தாமமுத
லோங்கும்பொருள்கள்சிவபூசையுஞற்றவொல்லையிவ்வரைப்பிற்
றூங்கிக்கொணர்மினெனவிடுத்துந்தரளங்கொழிக்குங்காவிரியுந்
தேங்குநவதீர்த்தமுஞ்சென்றுசிந்தைமகிழத்தோய்ந்தெழுந்தாள். (௬௬)

திரைக்கும்புனற்றீர்த்தமும்படிந்ததேவிதிருமேனியிடணிந்த
விரைக்குங்குமமுமலர்த்தொடையும்வெறிகூழ்சலவைமுதற்பலவு
முரைக்குமுனங்கொண்டேர்ந்துயிர்கட்குறுதிபயப்பதெனினவடன்
குரைக்குமணிநூபுரத்தாளிற்கூடுமுயிர்க்குங்குறையுண்டோ. (௬௭)

மொழியுங்கிரணமணிக்கலனும்பொற்றவிரையும்பூம்பட்டு
மொழியுந்திரத்தவெனத்தொடாளொளிர்வெண்சேவிழைந்துடீஇ
யிழியும்பழிபாதகமுழுதுமிரிக்குநீறுங்கண்மணியு
மொழியுமபனுவல்விதியாற்றூன்முழுதுந்திருமேனியிலணிந்தாள். (சுஅ)

வே று.

அருந்தவக்குறுமுனியாடுதீர்த்தமு, னிருந்திருந்தவத்தினையிறைவியெய்தி
டிருந்தியபரிசனத்தேவர்சென்றவர், பொருந்தியபொருளெலாம்போத[ளு
[ந்தீட்டுவார் (சுகூ)

சிவபுரத்தணிமையிற்சிவனுங்கோபுரத், தவமறவதிபமானைந்துபற்றுபு
புவனமுற்றுயிர்த்தவள்பூசைக்காகெனத், தவபகிழ்தலைக்கொளத்தந்திட்
[டார்சிலர். (எ0)

இந்திரனகர்புகுந்திணர்த்ததாருவோ, ரைந்தொடுங்திகளுமணிசெய்தேனு
வுஞ், சிந்தையகிரப்புறுமணியுந்தெவ்வுபு, வந்தொருசிறையெலாமலிவித்
[தார்சிலர். (எக)

மன்மகிழ்சிறப்புடையயானைவிசகவ, கன்மனைக்கூவியொண்கரகம்பாசனம்
பன்மணிப்படலிகைபரந்தவட்டகை, யென்னவும்புரிமினென்றேவினார்சி
லர். (எஉ)

மாதிரக்கமேற்றினைவவ்வியன்னவை, மீதுவிண்ணெல்லையின்விறந்ததீர்த்
தமும், பூதலவரைப்பிடைப்புணர்பம்பீர்தசமுங, காதலிற்கொண்டுபோய்க்
[கருற்றினார்சிலர் (எங)

கண்டம்மான்பதிற்றினுங்கலந்தநல்லவும், கொண்டபம்பீவினுங்குலவிபு
ள்ளவு, மண்டர்நாட்டதிசயமாகவுள்ளவு, மண்டினர்வல்வினர்வந்துய்த்தா
ர்சிலர். (எச)

இன்னணமிறைவனுர்பூசைக்கேற்றன, மன்னியபொருளெலாம்வவ்விஞா
னமா, நன்னசர்முறறியகையலாமெலாந், துன்னினர்பணிவிடைதொட
[ங்கினரோ (எரு)

வே று.

சிறைமலர்ச்சம்புமூலசின்மலன்கோயில்கொள்ளு
முறையினையுணர்ந்துவானிற்றசசர்கணமுயன்றுவில்லே
பிறைதவழெயில்கண்மாடம்பிலமெகாபமணிப்பூங்கொயி
னறைமலர்க்காவணகணலத்தகநிறுவித்தாரால். (எசு)

மண்டபமேடைவேதிமடைப்பள்ளியாதியாக
வண்டர்வீழ்யவனர்செய்தவாலயத்தெம்பிராட்டி
கண்டுளமகிழ்மீக்கொள்ளக்காதலிற்சிலர்நீராடி
விண்டமென்மலர்களாய்ந்துவேறுவேறமைத்துவைத்தார். (எஎ)

தாரணியிண்டைமாலைததைமலாத்தொங்கலாதி
சீரணிந்தியீற்றியோர்சார்செறிதரச்சிலர்கள்வைத்தா
ரெரணிகலன்பூணுடையிருங்குடைகவரியாதி
நீரணிகடாதிதூய்மைக்கழ்த்தினர்சில்லோர்வைத்தார். (எஅ)

நாறுமென்பனிநீர்வாக்கிநறுக்குறடுரிஞ்சுதேய்வை
யேறியகடிக்கத்தூரியுளகியபுழுகுவாச
மூறியகுங்குமப்பூக்கருப்பூரமுறமட்டித்த
கூறருங்கலவைசாலிற்கொளப்பெய்துநிறைத்தார்சில்லோர், (எசு)

தயிலமாமலகமஞ்சள்சாலிமாவானைந்தீம்பா
றயிரிழுதிளந்தேன்வேழச்சாறமிழ்தைந்தைந்தென்ன
வியலுறுமிரதம்பல்வேற்றுநங்கனியிளநீர்மற்றுஞ்
செயிரறுசலதநின்வாங்கிச்செறித்தனரொருசார்சில்லோர். (அ௦)

கடவுளரானுதவுமுண்டிசடல்வருமமிழ்தமேனைப்
படர்சுவைத்தெய்வவுண்டிபாரிடையமைக்கும்பல்வே
றடர்சுவையுண்டிநான்குமரதநக்கலத்திற்சேர்த்திச்
சுடர்விழுத்துகிலின்மூடித்தொகுத்தனரொருசார்சில்லோர். (அக)

கற்பகத்திழையும்பூவுங்கடவுளார்மணியுங்கொண்டு
பொற்புறவிதானித்தெங்குங்கும்புகைமணங்கமழவூட்டிப்
பற்பலவிளக்கம்வைத்துப்பனிநறுநீர்தூய்வாச
வுற்பலமலர்கள்சிந்திநிலமெழிலுறுத்தார்சில்லோர். (அஉ)

தொண்டகந்துடிதடாரிதூரியம்பதலைபம்பை
திண்டிமமுரசுமொந்தைசெறிகிணைதகுணிச்சங்கண்
மண்டுதண்ணுமையேவீணைவளைவயிர்பீலிகாளங்
கொண்டபல்லியங்களெல்லாங்கூடியாரியம்பாநின்றார். (அங)

இவ்வகைப்பணிகண்முற்றயாவருமியற்றலோடு
மவ்வகையுணர்ந்துவல்லேயம்பிகையெழுந்துசென்றாள்
பவ்வமென்றயிர்ச்சுமாவிப்பாங்கியர்மருங்குசூழ்ந்தார்
செவ்வியதேவர்கற்பச்செழுமலர்மாரிதூர்த்தார். (அச)

பிரமன்மாதவங்கள்சாலப்பேணுதல்குறித்தோவேகப்
பிரமநாமத்தையன்றான்பெற்றமைமதித்தோவந்தப்
பிரமன்மூவுலகையாக்கும்பேறுறநினைந்தோதேறம்
பிரமதீர்த்தத்தின்பாங்கர்ச்சென்றனள்பிணைமானன்னாள். (அரு)

மருவிடுதொழும்பின்மேன்மைவயக்கியபிரமன்பாங்கர்க்
கருணையின்பெருமைகாட்டக்கருதிமற்றவனைக்கூவிப்
பொருவிலிபூசைசாலப்புரிவதற்கிலிங்கமொன்று
தருகவென்றுரைத்தாள்கேட்டச்சதுமுகன்வணங்கிக்கூறும். (அசு)

அகிலமுமுயிர்க்குமன்னையறிதராப்பொருள்களில்லை
சகலமுமுணர்ந்துளாய்க்குச்சாற்றுவதென்னையெல்லா
நிகழ்வதைம்பூதந்தப்பூதத்திலிங்கவேட்கை
திகழ்வதினியற்றுகென்றான்செவிமடுத்துமையாள்பின்னர். (அஎ)

உயிரினுக்குலவூாவின்பச்சுவையினையுதவுமுத்தி
யியலினையுணரப்பூசையியற்றுவாள்சுவையைநல்குஞ்
செயிரறுபுனலைக்கொண்டுசிவலிங்கமாக்கமுன்னி
யயிர்வரித்தார்க்குமந்தத்தீர்த்தத்தினறலைச்சார்ந்தாள். (அஅ)

அம்பிகைதன்கையால்அப்புவைச்சிவலிங்கமாக்கினமை.

நீக்கமில்லாமலெங்குநிறைந்தபூரணத்தினின்று
தாக்கறநின்றவந்ததாணுவின்சரணம்போற்றிப்
போக்கறுதீர்த்தந்தன்னைப்பொள்ளெனத்திரட்டித்தேசு
தேக்கொளியிலிங்கமாக்கித்திகழ்தரவிருத்தினாளால். (அகூ)

விழைதருகணவன்மெய்யின்விராயிதுமுரணுமென்னத்
தழையெழின்மகளாய்நின்றதற்பரைக்கெறுழ்வன்மேருக்
குழைதரக்குழைத்தசெம்மல்கோளொடுமுரணீதென்னப்
பிழைதபநெகிழ்நீர்வன்மைப்பிழம்புறல்வியப்பிற்றேயோ. (கூ0)

மங்கலந்துவன்றியார்ப்பமாதர்பல்லாண்டிசைப்பப்
புங்கவர்குணலைசெய்யப்புலவர்கைகொட்டியாடச்
சங்கிரிசம்புயோகிதவப்பயன்முற்றுவிப்பா
ளங்கவன்றன்னைக்கூவிநிழற்றெனவருளிசெய்வாள். (கூக)

அம்பிகைஏவுதலால்சம்புமுனிசிவபெருமானுக்குநிழல்கொடுத்தமை

மருத்தகுநாவலென்னமருவியசம்புயோகி
கருத்துறுமகிழ்ச்சிதுள்ளக்கவித்துறநிழற்றிஏற்பத்
திருத்தநீர்கொண்டுநாதன்றிருமுடியாட்டவெண்ணிப்
பெருத்தபம்பீர்த்தமெல்லாம்பெருகுமாபாவித்திட்டாள். (கூஉ)

விழுமியமுக்கண்மூர்த்திவிரைமலர்ப்பதத்தன்னாட்கு
முழுவலன்பெழுந்தாலென்னவுற்றதீர்த்தங்களெல்லா
மெழுதருஞ்சீமத்தீர்த்தமெனவிறும்பூதுகொண்டாள்
கெழுதருமனையதீர்த்தமப்பெயர்கெழுமிற்றன்றே. (கூ௩)

வேறு.

ஏத்தியசீமத்தீர்த்தநீரினையுமெண்டிசைக்களிற்றின்மேல்வந்த
தூத்தகுதீர்த்தந்தன்னையுஞ்சுகந்தந்தோட்டலர்பெய்தனளமைத்துப்
பாத்தியமாசமனமருக்கியமும்பாங்குறவமைத்தருள்சொழிக்கு
மாத்தனூல்விதியார்சுத்தியோரைந்துமாக்கினளகிலமீன்றெடுததாள் (

ஆதனமூர்த்தியமைத்தருவுருவமருவமோடுருவமாயவற்றின்
பேதமுமாகிப்பிரிவிலதாகிப்பிரிதராவுயிரினைத்தொடர்ந்த
வேதமெய்தரியதாகியவ்வேதமெனைத்தையுந்துடைத்தருள்கொழிக்குஞ்
சோதியைமூர்த்திமானெனவருளாற்றுகளறக்கண்டருச்சித்தாள். (கூ௫)

பசர்ந்தபாத்தியமுன்மூன்றுநேரளித்துப்பகர்தயிலர்திகளாட்டித்
திகழ்ந்திடுமலிற்றினிடையிடையலர்சள்சேர்த்திருப்புகையொளியுணவு
மகிழ்ந்திடவளித்துச்சுத்தநீராட்டிவயக்கியவுருத்திரமனைத்தும்
புகழ்ந்திடுஞ்சந்தக்குழம்பருக்கியமும்டொர்புறமுறையினாட்டினளால். (

நுழையிழைத்துகிலாற்றிருவுருவீரநொடிக்குமுன்புலர்த்திமின்னரைநாண்
டழையமழகெறிக்குங்கோவணப்பட்டுஞ்சாத்திமெய்ம்முழுவதுங்குளிர்ப்பக்
குழைவிரைக்கலவைகோட்டியொண்சுண்ணங்கூர்தரமீமிசையட்டி
விழைதருகலனுந்தொங்கலாதிகளும்வேறுவேறெடுத்தலங்கரித்தாள். (௬௭)

அறுசுவைகொழிக்குநால்வகையுண்டியனைத்துமின்னுரைகிளந்தூட்டி
நறுவிரைப்புதுநீர்பொழிந்துபாகடையுநல்குபுபல்வகையொளியும்
பெறுமுறைசுழற்றிச்குடைமுதலுதவிப்பெருகியமியம்புவித்தோதிமே
யுறுவசிமுதலோர்தமைநடத்தியக்கின்றனளோடரிக்கண்ணாள். (௬௮)

நிச்சலுங்காலந்தொறுந்தொறுமுள்ளநெகிழ்தரவுருகியிவ்வாறங்
கெச்சமில்பூசைபுரிகுவாளொருநாளினிதுபூசனைமுடிந்ததர்பின்
முச்சகம்பழிச்சுமுதல்வனைத்தணந்தமுறைமையைநினைத்தனளாகி
வெச்செனவுயிர்த்துப்புளகமெய்போர்ப்பவிழுத்தகுதுதிவிளம்பினளால். ()

## வேறு.

இதுமுதல்(௬) செய்யுள் அம்பிகைசிவபெருமானைத் தோத்திரஞ்செய்தல்.

உலகேழுமொடுங்கவெழுந்துவிமிரூழிக்கனலுங்குமாரத்தழலாய்ப்
புலவோரலம்வந்தழியக்கடுகும்புசாநஞ்சமயின்றபுராதனனே
மலரோன்மகண்மேலெழுகாதலினுல்வருபாவமகற்றியநாவல்வன
மிலமாகவிருந்தருள்வாயடியேற்கெளிவந்தருளாமையினைந்திடுமே. (௱)

அருளேதுமிலாதொருபாலனுயிரழியத்தொடர்தென்றிசையாளியமன்
பொருளேதுமிலானெனவேகிலமேற்புரளச்சரணோச்சியபுண்ணியனே [ளு
தெருளேதுமிலான்பிறனில்விழையுஞ்சேர்ந்தார்க்கொலிதீமைசிதைத்தரு
மிருளேதுமிலாதலத்தடியேற்கெளிவந்தருளாமையினைந்திடுமே. (௱௧)

கலங்கிப்புலவோர்பெரிதுங்குலையக்கறுவுந்தகுவோர்குலவாழ்க்கையுறும்
வலங்கொள்புரமூன்றுமொருங்கவியமாயப்படைதொட்டமலர்க்கரனே
துலங்குங்கிரணப்பனிமாமதியோன்றொடர்சாபமறுத்துவரஞ்செறிவித்
திலங்கும்புகழ்ஞானதலத்தடியேற்கெளிவந்தருளாமையினைந்திடுமே. ()

விண்ணுடுநெடும்புவியுந்துயரவெள்ளிக்கிரியைப்பெயர்வித்திடுவோன்
கண்ணார்முகமும்புயமுஞ்சிரமுங்கடிதாகநெரித்தருள்கால்விரலோய்
புண்ணுடியவார்குலிசப்படையோன்புகர்வன்சொலைபோக்கிவரங்கள்பல
வெண்ணுதருஞானதலத்தடியேற்கெளிவந்தருளாமையினைந்திடுமே ()

பராவிப்பணியாதடியுஞ்சிரமும்பார்ப்பாமெனவெண்ணுமறன்கடையால்
வராகத்தொடுபுள்ளுருமாலயனுமருவுங்கழிமேன்மையவானவனே
விராவித்தவமாற்றியசம்புமுனிவெய்யோன்மலைவேலையடக்குமுனி
யிராமற்கருண்ஞானதலத்தடியேற்கெளிவந்தருளாமையினைந்திடுமே. ()

விலங்கற்கரையன்பெறுமெல்லியலாள்விம்மாந்துகரைந்துகரைந்துருகித்
துலங்கித்தளர்வெய்தமருங்குல்விழிசோரப்புனலங்கைசிரங்குவிய
விலங்கப்புளகங்களிவ்வாறுதுதியியைவித்துறுசோகமிணங்கலுமே
யலங்கற்சடையண்ணல்விரைந்தெதிரேயடல்வெள்விடைமேல்வெளிநின்
[றனனே. (௱௫)

இதுமுதல் ௪ செய்யுள் சிவபெருமான் பிரசன்னமாகிவேண்டியவரங்களைக்கொள்கென அம்பிகை அவ்வரங்கள்பெறுதல்.

வேறு

பூதகணம்புடைசூழப்புத்தேளிர்பொழிகின்ற
சீதமலர்வெளிதூர்ப்பத்திசைமுழுதுமிசைதேங்க
வேதமுனிவரர்பழிச்சமெய்யன்பர்குதுகலிப்ப
நாதரினிதருள்காட்சிநயனமலர்க்கெதிர்கண்டாள் (௪0௬)

இருங்கண்ணிற்சிறந்தவுறுப்பில்லையெனன்முகமனை
கருங்கண்கடம்பிரான்காட்சியினாற்களித்தவொடும்
பெருங்களிநெஞ்சகங்கொள்ளப்பேரமைத்தேயெண்முலைவிம்ம
வொருங்குருவமனைத்துமெழிலோங்கினவாலுமையவட்கே (௪0எ)

அல்வரைந்தமலர்க்கூந்தலகிலாண்டநாயகியின்
வல்விரைந்துபதமலரின்வணங்கியொருபானிற்பச
கல்வரைந்தவெறுழ்த்திண்டோட்காபாலிகண்ணேரிதசுச
சொல்வரைந்தகருணையினாற்றெருக்கவரங்கொள்கென்றான். (௪0அ)

எவ்வுயிர்க்குமெஞ்ஞான்றுமிருங்கிழவனாயிற்கு
மவ்வுயிரின்கிழவனேயெயருங்கிழவனெனச்சார்ந்த
கொவ்வைநறுங்கனிவாயாள்கொண்கர்திருவருணோக்கி
மூவ்வுலகுமெலரிதுய்யமுன்னிவரங்கொள்ளுமால். (௪0௯)

அகிலாண்டநாயகியாராதனைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-எ0௪.

---

## வரங்கொள்படலம்.

இதுமுதல் (௧௪) செய்யுள்தானஞ்செய்யும்பொருள்களும்அத்தானத்தால்வரும்புண்ணியங்களுங்கூறல்.

இமையார்கடொழுதேத்துமெம்பெருமானெனையாளவிலிங்கமாகி
யமிழ்தேசனெனச்சம்புமூலத்திலமர்ந்தனையேயனையதான
வமிழ்தேசனெனுநாமங்கேட்டவர்கள்சாலோகமடைகவன்பா
லமிழ்தேசனெனுங்குறியைக்கண்டவர்கள்சாமீபமடைகமாதோ. (௧)

திப்பியமாகியவமுதலிங்கத்தைத்திபானித்துத்தெரிசித்தோர்க
ளொப்பரியநின்னுருவமுறுகவந்தசிவலிங்கத்துவந்துபூசை
யெப்பொழுதினெப்பொருள்கொண்டியற்றினோரும்வினையினிரியல்போக
வைப்பனையாசினதடிக்கீழ்மாறாதசிவானுபவமருவிவாழ்க. (௨)

பெருமானேயமுதலிங்கத்தொருநாளைப்பூசனைக்குப்பெட்பினோடும்
பொருளாதிகொடுத்தவர்களிம்மையிலேவேட்டபெரும்போகமூழ்கி
யொருவாதசிவலோகத்தாண்டிலக்கமுறைநீந்துள்ளமுன்னிற்றெல்லா
மருகாமையெதிர்நிற்பப்பெரும்போகத்திடையழுந்தியருளிற்சேர்க. (௩)

இன்னல்கெடுகின்முடியின்மனுவோதியெளியனேனெடுத்திங்காட்டு
மன்னியசீமத்தீர்த்ததெரிசனத்தாற்பரிசத்தால்வருநீர்வேட்கை
பின்னமுறுபானத்தாலூர்வனவுமுத்திநிலைபெறுகவேட்ட
வெந்நலமுமத்தீர்த்தமுரைத்தவரும்பெற்றின்பமுத்திசேர்க. (௪)

மாதவங்களத்தகுசிமத்திர்த்தீந்தருமிருந்துவயக்கினோர்க்கு
மேதகையபயனனைத்தழாயுறுககோதானம்விரும்பியொன்று
கோதகனுமந்தணர்க்குக்கொடுத்தவர்க்குப்பரிமேதங்குயின்றபேறு
நீதகலவுளதாகவிரித்தெயின்மூன்றெரிருங்கெரித்ததேவதேவே. (௫)

திலதானம்புரிந்தவர்க்குச்செறிந்தபலபாவமெலாந்தேய்ந்துமாய்க
வுலவாதசெழுங்கனகமுதவுநர்கள்பரிதிபதத்துறைந்துவாழ்க
விலகாதசுவைநறுநெய்வீசிருக்கக்கினிட்டோமத்தின்மேவு
பலனுர்கபாணிவளர்பகழிவிழிகிடந்தொளிரும்பதுமத்தாளோய். (௬)

வத்திரதானங்கொடுப்போராயுளொடுபெருஞ்செல்வமருவியீற்றிற்
பொத்தியசீர்வருணபதமுறுகதானியதானம்புகன்றுசெய்வோர்
பத்தியெவரும்புரியத்தெய்வதமாய்விளங்குகபைங்கழையின்கட்டி
யுத்தமருக்குதவினோருறுதகனனுகர்ச்சியெனவுரைப்பவெல்லாம். (௭)

தவளவிரசிதங்கொடுப்போர்சந்திரன்வாழ்பதமுறுகதரணியீவோர்
திவளுமுடியிந்திரனுப்விண்முழுதும்புரக்கதிசமுப்பீவோர்க [ட்
டுவளருமிடும்பையெலாந்துமித்தின்பமுறுகதுவர்க்கனிவாய்வேய்த்தோ
குவளைவிழிக்கன்னணியரைக்கொடுப்பவர்கள்விண்டுபதங்குலாவிவாழ்க.(௮)

அன்னதானம்புரிவோரன்னமொரோரொவொன்றினுக்குக்கற்பமெலாவ்வொ
றென்னையாளுடைபிரான்சிவலோகத்தினிதமர்கவிலிங்கமீவோர் [ன்
துன்னுபோகம்பலவுமீண்டெய்திதோலாதவின்பமெல்லா
மன்னுமீசுரபதத்தினேற்றவர்களொடுமினிதுமருவிவாழ்க. (௯)

சிவசிசியிற்சிவலிங்கமுபகரணத்தொடுமளிப்போர்சிறப்பவேற்றிட்
டவமறுபூசனைபுரிவோரப்பொழுதேசீவன்முத்தராகநெஞ்சக்
கவலையறுகண்மணிகளீவோருமேற்பவருங்கயிலாயத்து [ழ்க.
மூவமையறுசிவபுரத்துமொரோரொவொன்றுக்கொருபதிற்றுண்டுறைந்துவா

மும்மலர்ஞட்படப்படுக்குமித்தலத்தின்முற்றவங்கண்முயன்றபேற்றுற்
செம்மைபெறுஞ்சிவஞானமளிப்பவருமேற்பவருஞ்செயிரிற்றீர்ந்து
விம்மியபேரானந்தவெள்ளத்துள்வாதனையும்விலகிமூழ்க
வம்மவிந்தஞானதலமமுதேசமெனும்பெயருமணிவதாக. (௧௧)

அமுதேசமெனப்படுமித்தலத்தெல்லையைங்குரோசத்தினுள்ளா
லமையாதகாதலினுலந்தணரைப்பதிட்டைசெய்வோரலக்கணீங்கி
யிமையார்களமுக்கறுப்பப்பிரமத்தின்வாழ்கவிவர்க்கவனியீந்தோ
ரமையாளுநாயகசாரூபத்திற்சீவன்முத்தியெய்திவாழ்க. (௧௨)

திருமாலைப்பதிட்டைசெய்வோர்திப்பியமாம்வைகுந்தஞ்சேர்ந்துவாழ்க
பொருவேதுமில்லாதசிவலிங்கப்பதிட்டைசெய்வோர்போக்கீங்கி
யொருவாதவிம்மைமறுமையிற்போகநுகர்ந்துயர்ந்தவீடுசேர்க
பெருவாழ்வுதருமித்தலவ்வசிப்போர்நின்னடியைப்பிரியாராக. (௧௩)

வேறுவேறிவ்வாறுவரம்பலவும்விழைந்திரந்துவியந்துபோற்றி
காறுபூங்குழலுமையாளுதர்திருமுகநோக்கிநம்பயாளன்முன்
கூறியதோர்வினாவினுக்குத்தரமீண்டுகொடுத்துமெனக்குறித்தியன்றே
தேறுமாறினியதுவுந்தெரித்தருளாயெனக்கேட்டதேவதேவன். (கச)

## வேறு.

இரந்தபல்வரங்களுமீந்திடுடாமதுச்சுரந்தபன்மலர்க்குழற்றோகைமற்றினி
யுரந்தைவையுகந்தனக்கறவினையசற்,குரந்திகழிறையுமிங்குரைத்துமென்று
[பின். (கரு)

இதுமுதல் (ச) கவி சம்புமுனிசிவபெருமானிடத்தில்வரம்பெற்றமை

நன்னிழற்பரப்புறுநாவற்றுருவாய், முன்னுறுஞ்சம்புமாமுனியைநோக்கி
னு,னன்னதுதெரிந்தவனடித்தாழ்ந்தெழுந், துன்னருங்களப்பினுலுரைத்
[தன்மேயினன். (கசு)

அடியனேனுய்ந்தனனடியனேனுறுங், குடிமுதலெழுமையுங்கோதற்றுய்ந்
தன, முடிபொதிர்த்தெழுந்தவிம்முறிசெய்நாவலந, கடிநிழற்கருணையிற்
[கலந்தநீர்மையால். (கஎ)

எழிலமுதீச்சரமென்னுமித்தலந். தொழுதகுசம்புவீச்சரமென்றோதவு
நிழலிதினென்றுநீங்கலயின்வைகவு, மழகியவரமெனவருளல்வேணடுமால்.

என்றுபல்வரங்களுமிரப்பவெம்பிரா, னன்றெனவவையெலாநல்கிப்பாஙக
ரிற்,றுன்றியமறைபலதுதிக்கும்வேதளமே, லொன்றியவருள்விழியுறுத்தி
[ருனரோ. (கஅ)

கமலமெல்லணையினன்கசிந்துதாழ்ந்தெழுந், தமலனேயுய்ந்தனேனகில
கோடியுந், திமிரவல்வினைகளிற்றீர்ந்தின்றுய்ந்தவென், றிமிழ்கொளும
[ன்பினுலினிதுகூறுவான் (உ௦)

பிரமதேவரைச்சிவபெருமான்திருவிழாநடத்தும்படிவரமளித்தல்.

காசினமிலகியகண்டத்தெம்பிரான், மாசிமாமதிவருமதியினுளெனப்
பேசியமிருகசீரிடத்திற்பேணிய, தேசவிர்விடைக்கொடிசிறப்பவேற்றுப. ()

பொங்கெழிற்றிருவிழாப்பொலியச்செய்துபின், பங்குனிமதியிடைப்பகலொ
ன்றுளெனத், தங்கியவுரோகணிதன்னினீள்சொடி, யிங்குயிரனைத்துமின்
[பெய்தத்தாழ்த்துபு. (உஉ)

அற்றைநாளென்பெயரணிந்ததீர்த்தத்தி, னுற்றவரனைவருமுவந்துதோயவு
மற்றவர்வேட்டபல்வரங்களெய்தவும், பற்றியதெனதுளம்பணிக்கவென்ற
[னன். (உங)

பங்கயனின்னணம்பகரக்கேட்டரு, ளங்கணனன்னணமாகவென்றுபின்
றங்கினின்றேத்துநர்தங்கண்மேலெலாம், பொஙகருள்விழியெதிர்புகுத்தினு
[னரோ. (உச)

அவரவர்மகிழ்ச்சியினடிகள்போற்றலின், றிவறியவரமெலாமியம்பிப்பெற்ற
னர், சிவபிரானின்னணவரங்கள்சேர்த்தன, வுவமையிலருளுமைக்குதவ
[ப்புக்கனன். (உரு)

வரங்கொள்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் எஉசு.

---

# ஞானவுபதேசப்படலம்.



இதுமுதல் (௩௫) செய்யுள் சிவபெருமான் நந்திதேவருக்கும் சம்புமாமுனிக்கும் அம்பிகைக்கும் ஞானவுபதேசஞ்செய்தல்.

சந்தவான்மதிமிலைச்சியதாழ்சடையழகர்
நந்திவாண்முகநோக்கினர்நந்திதாழ்ந்தெழுந்து
முந்தினர்திருவுளத்தெழுமுன்னமிக்கறிந்திட்
டந்தின்மேயினரியாரையும்புடையகற்றினனால். (௧)

சம்புமாதவனந்தியென்றிருவருந்தவங்க
ளும்பரார்க்கரியனமிகவுஞற்றியபேற்று
லம்பர்மாதுமையாளொடுங்கேட்கியவருள்பெற்
றெம்பிரானிருந்தருள்புரிமண்டபமிழைத்தார். (௨)

சிமையமால்வரையெனச்சிறந்தொளிருமண்டபத்தி
னமையுமாதனத்தங்கணன்வீற்றிருந்தருளி
யுமையைநோக்கிநீயோகுழப்பதின்வினையினையாற்
சமையமாறுமுய்ந்திடவதுகேளெனச்சாற்றும். (௩)

உலகமியாவையுமோங்கியாகமதருள்வழியி
னிலவுநீர்மையதாதலினிழன்மணிப்பூணு
யிலகவாட்டுவாளுடிமுன்காட்டுமாறென்னப்
பலவுநாம்பயின்றுலகினைப்பயிற்றுதல்வேண்டும்.

ஆகையான்மலபந்தமாகியவுயிர்மாயா
போகமார்தரநிற்றழீஇப்போகியாயிருந்தும்
யோகமாற்றிமெய்ஞ்ஞானமுற்றுயர்சிவயோகத்
தேகமாகிவீடெய்திடயோகியாயிருந்தும்.

விரைத்தமென்மலர்வாளியான்விளிந்தகாரணமு
மிரைத்தவையகத்தியாவருநேரிழையவர்பால்
வரைத்தவின்னலநுகர்ந்தகாரணமுமானினையா
யுரைத்தவொண்பொருளிரண்டிற்குஞ்சான்றெனவுணர்தி. (௬)

என்றுகூறலுமகிழ்ந்துமையிறைஞ்சியீ துரைக்கு
மொன்றுமாமலத்தழுந்தியவுயிரெலாமாயைத்
துன்றுபோகமுற்றுனதருண்ஞானத்தாற்றுகடீர்
நன்றுவீட்டினைநண்ணுமென்றுரைத்திநாயகனே. (௭)

அம்பிகைவினா.

இருளுமாமலம்யாதுயிர்யாதியாமாயை
கருமமியாதுமெஞ்ஞானமியாதியாதுகாண்முத்தி
பொருவிலாவிவையனைத்தையும்புகரறவடியேன்
[illegible]யெனச்செய்யவாய்மலர்ந்தாள். (௮)

சிவபெருமான்விடைபுகழ்தல்.

கலைமலர்க்கரத்தணிந்தருள்கண்ணுதற்பெருமா
னிலைமுகத்தபூணினமுலைமாதராயெல்லா
மலைவறத்தெளிப்பாமதியெனவிறைவழங்கும். (௧)

காளவன்மலமூலந்தங்காலவெல்லைகளின்
மீளுமெண்ணருஞ்சத்திகளுடையதாய்விரவிக்
கோளுறும்பசுவறிவினைக்கூட்டொடுமறைக்கும்
வாளுறும்பலவிழியினைமறைத்திமிருள்போல். (௧௦)

எண்ணிறந்தனசிற்றறிவினும்பலவியல்பி
னெண்ணிநிற்பனசார்ந்ததன்வண்ணமாய்நவில்வ
வண்ணுஞ்சிற்றறிவினுஞ்சுதந்தரத்தனவல்ல
வுண்ணயந்தாமுணர்த்திடினுணர்வனவுயிரே. (௧௧)

மாயைசுத்தமேயசுத்தமேயெனவிருவகையா
மாயமாயைகளிரண்டுமெய்யறிவுருவல்லாற்
றோயுறுதநம்மருளினாற்றொழிலுற்றருயிர்க்கு
மேயசீர்த்தனுவாதிகளன்குமாய்விரியும். (௧௨)

கருமமென்பதுமாயையேகருவிகளாகத்
தெருள்வழங்குநம்மருளெனப்படுந்திரோதானப்
பொருவில்சத்தியின்சகாயத்தாற்புல்லறிவுயிர்கண்
முருகுவிம்மியகுழலினாய்முனைந்துசெய்தொழிலாம். (௧௩)

புந்திவாக்குருவத்தினும் புரியுமன்னதுதான்
வந்துநல்லதுந்தீயதுமெனவிருவகையா
மந்தநல்லதுந்தீயதுஞ்சஞ்சிதமாகிப்
பிந்தியாருயிர்க்குணவுமாய்ப்பிறப்புக்கும்வித்தாம். (௧௪)

உருவத்தாற்கருமந்தவவீட்டியுமுருவங்
கருமத்தாற்றவவீட்டியுங்காழ்த்தவாணவமே
மருவத்தாழ்ந்தகேவலத்திடைமன்னியவுயிரிற்
றிருவத்தாஞ்சகலத்தியானெனதெனச்செருக்கும். (௧௫)

இதமெனப்படுநல்வினையின்பமேபயக்கு
மிதமெனப்படாத்தீவினையின்னலேபயக்கு
மதர்நெடுங்கணாய்மற்றவையறிந்துசெய்வினையுங்
கதுவுநெஞ்சறியாதுசெய்வினையுமாய்க்கலவும் (௧௬)

புடைபெயர்ந்திடும்வினைபுடைபெயர்தராவினையென்
றடைவினோதியவவ்வினையிவ்விதத்திரண்டாந்
தொடைமலர்க்குழன்மாயையுங்கருமமுந்தொகுத்துத்
தடைசெய்யாணவத்தொடுமலமூன்றெனத்தகுமால். (௧௭)

மாயைகாரியமானமாமாயையுநமது
தூயசீரருளானுந்திரோதாயியுந்தொகுத்திட்
டாயுநான்மலமைந்தெனவறைவதுமுண்டாற்
றேயுநூலிடைவருத்தியதிதலைமென்முலையாய். (௧௮)

இனையவைம்மலபந்தமுமிரண்டெனும்பழைய
வினையும்வன்மலவேருமான்மாவினுக்கல்லாற்
றினையுநந்தமக்கில்லைநந்திருவருளொழிய
வனையமாயையுங்கருமமுமூலவியுமசையா. (கக)

இந்தமாயையுங்கருமமும்பந்தமேயிவற்றைத்
தந்தாருயிர்க்கென்னெனிற்சாற்றுதுங்கேண்மோ
முந்துமாணவமுரண்கெடமூட்டினமாசு
சிந்தவேறுமாசறுவையிற்செறித்திடுமாபோல் (உ0)

படைத்தலும்புவனங்களைப்பாதுகாத்தலும்பின்
றுடைத்தலுந்தகநிறுத்தலுமருடுறுத்தலுமென்
றடுத்தவைந்தொழிலயன்முதலைவருமாய்நா
மெடுத்துமின்றனமாயினுமெமக்கிலைவிகாரம். (உக)

விரவுமாயையெம்முடைமையற்றாயினும்விடந்தா
னரவைவென்செய்யுமங்கியைச்சூடுவன்செய்யும்
பரவுமிந்திரஞாலம்பண்ணுநரையென்செய்யுங்
குரவமாலையாயெமக்குதுகொடாதுகாண்மயக்கம். (உஉ)

அல்லதூஉமிருளாணவமயக்குவததனு
னல்லமாயையுங்கருமமுநாடியவுயிரை
வல்லவாறெலாமயக்குவமயக்குமாணவந்தேய்ந்
தில்லையேலவையுயிரையுமயக்குவதிலையே. (உங)

தேங்குபேரொளியாகியசிவமெனுநாமு
நீங்குறாதநஞ்சத்தியாய்நிலைபெறுமருளுந்
தூங்குமாவியுந்தொடர்திரோதாயியும்பிந்த
வொங்குமாணவத்தெழுழ்வலியுரைப்பரிதணங்கே. (உச)

கரியவாணவந்தேயுமாகலந்தநஞ்சத்தி
யுரியதாஞ்சிவபுண்ணியமுடன்விராயூட்டும்
பெரியவாட்கணும்பின்மலபாகமாம்பின்னர்
விரியுஞ்சத்திநிபாதம்பின்வினையொப்புமேவும். (உரு)

ஆய்வேலையின்மலமெனவறைதிரோதாயி
மாயிரும்பொருள்யாவையுமாறவேமாறித்
தூயவின்னருளாகியேநின்றிடுந்தோகா
யேயுமிவ்வருளாலலதிருதீயிர்க்கிருளே. (உசு)

இச்சைஞானமுங்கிரியையுமானவிவ்வருளே
துச்சிலாகியகலாதியிச்சையுந்தொலைத்திட்டு
வெச்செனுணவம்விழுங்கிடப்பட்டவாருயிரி
னிச்சையாதியும்விளக்கியுள்ளிருந்திமேலாகும். (உஎ)

பிறிவுறுஞ்செம்மருளினாலெம்மையும்பெயரா
மறிவினீங்கியதன்னையுமலைவறத்தெரிந்த
வறிவுபானுவின்விழியெனவெம்முளையடங்கிச்
செறியுமானந்தமொன்றுமேதிளைக்குந்தேமொழியாய். (௨௮)

மருளினான்முதலென்றலுமன்னுயிரருள்கண
டருளினான்முதலென்றலுமருண்முதலென்றுந்
தெருளிலாததிலழுந்தலுந்தீர்ந்தெம்மோடறிவா
யிருள்செய்கேவலம்போற்கலந்திருப்பதேமுத்தி. (௨௯)

பேதமாகியபாவனைபேணுவதெல்லா
மேதமாகியபந்தமேயெனதியானெனுமால்
போதவாருயிரபேதபாவனைபுரிவஃதே
மாதராயுயர்முத்தியென்றுரைத்திடுமறையும்- (௩௦)

பரிதிமுன்னிருளெனமலம்பரையிடைமாயுங
கருவிமுன்பகல்விளக்கொடுகெடுக்குமூழொன்றே
மருவுமன்னதுங்கருணையால்வாங்குவம்யாமே
பொருவில்சஞ்சிதமுன்னரேயழிந்ததுபூவாய். (௩௧)

எனறவூழுடலிருத்தலினேறும்வல்வினையுந்
தோன்றுமேற்றிருவெழுத்தினைச்சூழ்ந்திடினழியுஞ்
சான்றவீட்டினைச்சார்ந்தவர்தமக்குமாலையமுன்
மூன்றுமார்வமோடிறைஞ்சுதன்முறைமையாமணங்கே. (௩௨)

தொடுத்தநின்பெருங்கடாவினுக்கவிர்பொலந்தொடியாய்
விடுத்தனம்விடையறிகெனவிமலனாரருள
மடுத்தவன்பொடுகேட்டமால்வரைமகளோடுந்
தடுத்தவைம்பொறிநந்தியுஞ்சம்புமாமுனியும். (௩௩)

அருளெலாமுளத்தழுத்தினர்தெளிந்தனர்நிட்டை
மருளெலாந்தபமருவினர்மன்னுமுப்பாழு
மொருவிமேற்பெரும்பாழெனுமுலப்பிலானந்தப்
பொருளொடேகமாய்ப்பொருந்திடுமுத்தராயிருந்தார். (௩௪)

சீவன்முத்தியேதிகழ்பரமுத்தியேயென்ன
மேவுமுத்தியோரிரண்டினுமேவினராகி
மூவரும்பணிமுயன்றிருந்தனரயன்முயன்ற
தேவருந்தொழுந்திருவிழாத்திறமினித்தெரிப்பாம். (௩௫)

ஞானவுபதேசப்படலம்முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௭௬௧.

---

# திருவிழாப்படலம்.

இதுமுதல் (௩௪) செய்யுள் திருவிழாச்சிறப்புக்கூறல் மாசிமாதம் மிருகசீரிடத்திற்கொடியேற்றி பங்குனிமாதம்ரோகணியிற்கொடியைத்தாழ்த்தல்

பொறிவண்டுழக்கமுறுக்கவிழ்ந்துபுதுத்தேன்றுளிக்குஞ்செழுங்கமல
நறுமென்பொகுட்டுமலர்த்தவிசினன்குதலைப்பண்ணவனுவற்
செறிமென்னிழலில்வீற்றிருக்குந்தேவர்தேவனருள்வரத்தா
னெறியின்றினியதிருவிழாவிலதிற்புரிவானிது செய்தான். (௧)

புரிசையாதிபலவுறுப்பும்பொருப்பென்றெவருமதிசயிப்ப
வரிசையாகவாலயநூன்மரபின்வகுத்துக்கிரணங்கள்
விரிசெய்மாடமாளிகைகள்விறந்தபலவீதியும்போக்கித்
துரிசிலாதமணிநகரந்துறக்கநாணவிருத்தான். (௨)

பிரமதேவரால்அகிலாண்டநாயகியையும்மற்றுள பரிவார தேவதைகளையும் ஆக்கப்பட்டது

நெகிழன்புருக்கவகிலாண்டநிமலையுருவாயிருந்தாங்கே
திகழுவளத்திற்றியானித்துச்சிற்பம்விளங்கத்திருவுருவொன்
றகிலவுயிருநதிசேரவமைத்துநிறுவிப்பூசித்துப்
புகழைங்கரன்வேண்முதலானபுலவருருவும்பினிதமைத்தான். (௩)

செம்பொன்மணித்தேர்கடாங்கவிழ்க்குஞ்சினவெங்களிறும்வாம்புரவி
யம்பொற்சிவிகைகவிகைகொடியாலவட்டமயிர்க்கவரி
யிம்பர்விழையும்பலபொருளுமீண்டவாக்கிவிமானமுடங்க
லும்பர்முதலோர்பரவிநித்தானுலகமாக்கும்பணிகொடுத்தான். (௪)

முடங்கலேற்றுமலர்த்தவிசின்முறையினிருந்திமுடிதாழ்த்தி
மடங்கலறியாமகிழ்சிறப்பமதர்க்கணமடமாதர்களோடு
மிடங்கொள்வானத்திமையாருமெண்மாதிரருமுரகர்களும்
விடங்கொப்புளிக்குமணிவேற்கைவேந்தர்பலருஞ்சென்றிறுத்தார். (௫)

இதுமுதல் (௨) கவி முளைத்தெளித்தல் கொடிச்சீலையெழுதல் கொடியேற்றல் இம்மூன்றுங்கூறல்.

வம்புவிரியுஞ்செழுங்கமலமலர்மெல்லணையான்மகிழ்சிறப்பக்
கும்பமதியிற்கார்த்திகைநாள்குலவுந்தினத்திலியமியம்ப
வும்பர்முதலோர்புடைசூழவொளிர்மண்விதியாற்றினிர்கவர்ந்து
பம்புமணிப்பாலிகைபலவும்பரப்பிச்சொரிந்துமுளைதெளித்தான். (௬)

வழிநாளடுத்தவுரோகிணியின்மதவெள்விடையையிலேகித்துச்
செழிவான்படத்திற்பூசித்துத்திகழுமிருகசீரிடத்திற்
கழிவானவர்கடொழுஞ்சோமாக்கந்தரெதிரேயெழுந்தருளப்
பழிதீர்ந்துலகமுழுதுய்யும்படிவார்கொடியிற்பசுவுயர்த்தான், (௭)

அந்நாண்மாலைமுதலாகவந்தநாளுக்காறென்று
நன்னாட்காலையிருகாலிற்றுமீரைங்காலத்தும்
பொன்னார்மணிக்கிம்புரிக்கோட்டுப்புத்தேண்முருகவேளிவர்க்குக்
கொன்னுதரவிற்றிருவிழாக்கோலம்பிறங்கச்சுயற்றினன். (௮)

ஆறுந்திருநாண்மாலைமுதலாகவொன்பானாட்காலை
யீறுங்காலமோராறுமிருண்மாமலத்தினிகல்கடந்து

பேறுத்தரிக்குமடியார்க்குப்பிறங்கத்திருச்சாறினிதெடுத்தான். (௯)

ஒன்பானதிருநாண்மாலைமுதலாகவொருடன்னிரண்டாநா
டன்பாற்காலையீறாகச்சாற்றுமாறுகாலத்து
மன்பாதரவிற்கலியாணவழகர்தமக்குத்திருவிழா
நன்பார்முழுதுங்களிதூங்கிநவையிற்றீரவினிதமைத்தான். (௧0)

இரண்டாந்திருநாளினுற்றமாலைமுதலாக
பொருவில்குண்டமோரைந்திற்பொங்குந்தழலாகுதியோம்பி
மருவுமிருநாற்றிசைமுழுதுமனுவாற்றகைத்துப்பலியோச்சிச்
செருவின்மலியத்திரதேவர்தமக்குவிழாமுன்செய்திட்டு. (௧௧)

பதினேழெனவந்திடுந்திருநாட்பயின்றகாலையீறாக
விதியானின்றவீரைந்துகாலத்திடத்தும்வெவ்வேறு
கதிசேரூர்திமேல்கொண்டுசவின்சந்திரசேகரர்போத
நிதியார்பலருந்தானங்கணிசழ்த்திவணங்கவிழாவெடுத்தான். (௧௨)

சிவபெருமான் முன் அஷ்டகொடிஏற்றல்.

அந்தப்பதினேழெனுந்திருநாளந்திக்காலத்திமிலேற்றுச்
சந்தப்படமோரெட்டினையுந்தயங்கப்பூசையினிதமைத்துப்
பந்தப்பழையவினைமுருங்கப்பதினெட்டெனுநாட்காலைதனில்
வந்தப்புணிந்தாரெதிர்நிற்பவயங்கெண்கொடியும்பசுவுயர்த்தான். (௧௩)

ஒன்பானிரட்டித்திருநாளென்றுரைத்தவைகன்முதலாக
வொன்பான்மணிக்குண்டமுஞ்செந்தீயொளிரவந்நாண்மாலையினில்
வன்பார்மகள்செய்தவம்வாய்ப்பமணிநித்திலப்பந்தரினீழ
லென்பாபரணப்பெருமானாரெதிரில்வீதியுலாப்போந்தார். (௧௪)

புணருமிடனும்வரைக்கிள்ளைபூங்கைக்கருப்புச்சிலைமலர்க்கோ
லணவுதொழிற்கேற்புறக்கிரியினணங்குசெலுத்தவட்கினிய
கணவர்பூதநாதரெனக்கரையும்பெயர்க்கேற்புறப்பூதத்
தணிவிலூர்திபத்தொன்பானாளிற்றயங்கக்கடாவினார். (௧௫)

திருமாறனதுகூறேயாஞ்செயலைதெரித்தாங்கவனணையை
யொருபாலுமையாள்கொளக்கொடைமைக்கொருவரிவரேயெனவெவரு
மருளாதுணரக்கொடைவழங்குமலர்க்கற்பகத்தையண்ணலா
ரிருபான்றினத்திற்றிருவீதியெழில்கொப்புளிப்பத்தூண்டினார். (௧௬)

மன்றவடியார்புரிகுற்றமதியாதவர்செய்குணங்கொள்ளு
நன்றிதெரித்தாங்கறனீக்கிநற்பாலுனும்புள்ளுமையூரக்
குன்றுநினைந்தாங்கியல்கொள்கைகொள்ளவெவருங்கயிலாய
மொன்றுதலைப்பெயிருபானாளுவப்புற்றிறைவருந்தினார். (௧௭)

தருமவிடையுமால்விடையுஞ்சகலபொருளுமொருப்பாதி
மருவவுருவிற்பாதியுறுமாதுதாமும்பகுத்தாங்குப்
பொருவெள்விடைகள்வெவ்வேறூர்க்கணுமையுமொருதாமுந்
தெருவினிருபதிரண்டாநாட்செம்மற்சிவனார்நடாவினார். (௧௮)

முன்றுக்கலைப்பெய்யிருபதெனமொழியுந்திருநாளவிர்செம்பொ
ஒன்றமணித்தேரைங்கரனுமயில்வேலிறையுஞ்சண்டனுங்கான்
கான்றவெறிபபூங்குழற்கொடியுங்கதுமென்றுகைப்பப்புரயடுநாட்
சான்றநிலத்தேர்பொருமணித்தேர்சங்கத்தலைவருருட்டினர். (க௯)

விலங்கற்கரசன்றரமகளிர்க்கரசாய்விளங்குந்தனக்கினியைய
விலங்குக்கரசையகிலாண்டவிபலையுகைப்பவமுதேசர்
மலங்கடிமித்தார்வடிவிடத்தும்வதிதநெறித்தாங்கருண்மயமா
யிலங்குநந்திதனையறுநான்சென்னுநாளினியக்கினர். (உ0)

ஐயைந்தெனவந்திடுந்திருநாளாந்தோமரியின்மாதுமையேக
வைந்தரித்தவயிற்றிவுளிமேல்குங்கலியிற்றியோர்க
ண்ணபுந்திறஞ்செய்வரம்பெறுவாறுடிசகமந்தெனவனப்புச்
செய்யும்புரவிமேற்கொண்டுசெக்கர்ச்சடையாரூக்கினர். (உக)

பயில்வானவர்கள்பலர்காவப்பசும்பொற்குழைக்காதுமைமாது
செயிர்தீர்சிவிகைமேற்கொள்ளத்திகழ்ந்தவாதிப்பெருஞ்செல்வப்
பெயராதரிக்குஞ்செயற்கேற்பப்பேறுமிருபததாறுநா
ளயிராவணத்தைவெண்ணறைவலடிவீற்றிருந்தாரினிதுகைத்தார். (உஉ)

மன்றினடிக்கும்பெருமானூர்வயங்கவிருபத்தேழாநா
ளான்றும்விடியற்சிறுகாலையுவப்பக்காட்சிகொடுத்ததற்பி
னன்றுவருமுரோகணிநண்பகலினையனூர்தீர்த்தத்திற்
கொன்றைமுடியாரிருந்தீர்த்தங்கொடுத்தாருலகங்குறைதீர. (உங)

அஷ்டகொடியைத்தாழ்த்தல்.

அந்நாண்மாலையெண்கொடியுமாண்டபசுவேறினிதிறங்கப்
பின்னுமிருபத்தெட்டாநாட்பேனுமாலைமுதலாக
முந்நாண்மாலையீருகமூன்றுபொழுதுஞ்சிவிகையின்மே
லென்னுள்பள்ளியறைப்பெருமானெழிலார்கோயிலுலாப்போந்தான். (உச

மோனமுறுநற்றிருவிழாமுப்பத்தொருநாண்முதலாக
வீனமகலமூன்றுநாளியங்கமுப்பத்தொருநான்கென்
றூனதினமுன்மூன்றுநாளருள்சேர்ந்திலகுசண்டேச
னூனமகன்றமணிமுத்தினூர்திமிழலினுலாப்போந்தான். (உரு)

மொழிந்தசண்டன்றிருவிழாமுடிவாமுப்பத்தாறுநா
ளிழிந்தகுணந்தார்மனமேபோன்றிருண்டகங்குலிணர்மலர்கள்
பொழிந்துபுலவர்போற்றிசைப்பப்போற்றுமடியார்மும்மலமு
மழிந்துவிடமற்றொருகொடியினுனேறிறக்கியயன்றொழுதான். (உசா)

சிவபெருமான்பஞ்சப்பிரகாரம்.திருவுலாப்போதல்

மறைசூத்திரமேபுராணமேவயங்குகீதமேநிருத்த
நிறைவாத்தியமேயெனவைந்துநேரேயியம்பவளமெல்லா
முறையாநின்றவுட்சூழன்முதலாவரணமோரைந்து
மிறையார்முப்பத்தேழாநாளிமையார்வியப்பவுலாப்போந்தார். (உஎ)

விடையாற்றல்.

துணிநீர்ப்பாங்கர்சூழ்போக்கித்தோடார்மலர்கண்மிகப்பெய்து
மணியாணிரைத்தமண்டபத்தின்வதிந்துமுப்பத்தொட்டாநா
ளணிநீராடிக்கலவைமுதலணிந்துசுவைநாருணவயின்று
பணியாபரணப்பெருமானார்பற்றும்விடாயைப்பாற்றினர். (௨௮)

ஆற்றைத்திருநாள்வளர்மாலையவிர்சித்திலப்பந்தரினீழற்
கொற்றச்சவிகைசாந்தாற்றிகோலக்கவரிகொடிபிறவும்
பற்றிக்கடவுளார்போற்றப்பவனியினிதுபோந்திறைவர்
மூற்றக்கவினுமணிக்கோயின்முன்னியுமையோடமர்ந்திருந்தார். (௨௯)

இவ்வாறுதிப்பெருஞ்செல்வர்க்கியையவாதிப்பிரமனர்
செவ்வாய்மையனவினிதடுத்ததிருவார்விழாவையானிடரு
மவ்வானவருமுவந்தாதிப்பிரமோச்சவமென்றன்றுமுதற்
றுவ்வாவமிழ்தங்கண்டாரின்வருடந்தோறுந்தொழாநின்றார். (௩0)

ஆதிப்பிரமன்றிருவானைக்காவினமர்ந்தார்க்கினிதெடுத்த
காதற்சிறப்புத்திருவிழாக்கவினப்புரிந்தோர்தெரிசித்தோர்
தீதற்றவனிமுழுதாண்டுதேவர்போகம்பெரிதார்ந்து
சாதற்பிறப்பிற்றலைப்படாத்தனிவீட்டின்பத்தழுந்துவார். (௩௧)

மூவாமுதல்வன்றிருவிழாமுடிவிற்பிரமதீர்த்தத்தி
னோவாவன்பிற்படிந்தோருமுலகமுழுதுமொருதிகிரி
தாவாதுருட்டிவிண்ணாண்டுசனனமரணப்பெருந்துக்க
நீவாவளர்பேரின்பநலநீங்காநிலையிற்றுலங்குவார். (௩௨)

திங்கட்கடவுள்கதிர்க்கடவுள்சேருமுவாத்தோறொருவருடந்
தங்குமனையதீர்த்தத்திற்சார்ந்துபடிந்துவெண்ணாவற்
பொங்குநிழலின்வீற்றிருந்தபுனிதர்பாதம்போற்றிசைத்தோர்
துங்கவினையும்பெரும்பிணியுந்தொலைத்தானந்தத்துறைபடிவார். (௩௩)

செந்தாதுகுக்குநறுங்கமலசெம்மலெடுத்ததிருவிழா
நந்தாச்சிறப்பிற்சிறிதுரைத்தாநல்லதவத்தீர்தசரதன்பால்
வந்தான்வினையினரக்கனுயிர்மாற்றினாற்குவரம்பலவுந்
தந்தார்சரிதங்கேண்மினெனச்சாற்றுந்தவத்தினுயர்சூதன். (௩௪)

திருவிழாப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௱௯௫.

---

## நீலவிண்டுவீச்சரப்படலம்.

இதுமுதல் (௧௯) செய்யுள் இராமாயணத்தின்கதைஆதியந்தங்கூறல்.

சுரர்க்குமாற்றலனாகியதோல்வியில்வலியோன்
பரக்குநீர்க்கடனுப்பணைபயின்றிடுமிலங்கை
யரக்கனாருயிர்பருகியவலைகடற்றுயின்று
புரக்குநாயகன்றசரதராமனாய்ப்போந்தான். (௧)

தந்தையேவலில்வனத்திடைச்சரித்திடுநாளில்
வந்திராவணன்சீதையைவௌவினனேக
முந்துமானமுந்துயரமுமொருங்குறமுடிப்பா
னந்திவண்ணர்தம்மடிதொழுதருண்மிகக்கொண்டான். (உ)

உடங்குகின்றதன்னிளவலுந்தானுமெய்யெனச்சென்
றடங்கலாருளம்பனிப்புறகிட்கிந்தையமரு
மடங்குருவிறல்வானரப்படையொடும்வளைந்த
விடங்கொளாழியிற்சேதுசெய்திலங்கையிற்புக்கா. (ங)

வெம்புகின்றவல்லரக்கர்தம்விழுப்படையோடுங
கும்பகன்னனையிராவணன்றனையுயிர்குடியா
வும்பரேக்கறுமிலங்கையைவிபூடணற்குதவி
வம்புண்கோதையையுடன்கொண்டுவழிக்கொண்டுமீண்டான். (ச)

தண்டமேந்தியகரத்தினர்தயங்கிதழ்மடித்துண்
டண்டம்விண்டெனவார்த்திடும்வாயினர்வெருவக்
கொண்டவாக்கையராய்க்கும்பகன்னனுங்கொற்ற
மண்டிராவணப்பதகனும்வளைத்திடக்கண்டான். (ரு)

மாயையாலிறந்திடுமுடன்மரீஇயமருடற்ற
மேயினுர்கொலோவெனவெரீஇயையமுற்றவர்தஞ்
சாயையேயிவைதம்மைபுந்தாக்குதுமென்ன
நாயனுருருச்சேதுவினிறீஇநயந்தெழுந்தான் (சு)

கொன்னிராவணச்சாயையேயொழிதரக்கும்ப
கன்னனேர்வருங்கதழுருச்சாயைகையகலாப்
பின்னரேதொடர்ந்தலைசெயப்பிணிப்புறுமனததா
னின்னசாயைமற்றெங்ஙனமிறுத்துமென்றிறப்பான். (எ)

நங்கைபாகற்குநிழல்செயுநாவன்மாநகரிக்
கைங்குரோசமென்றறைந்திடுமெல்லையையடுத்தான்
பொங்குசாரிருளிரவிகண்டெனப்புலர்ந்தாங்குத்
தங்குமேனவன்சாயையுந்தணந்திடக்கண்டான். (அ)

வேறு.

வினையெனவுடன்றொடர்வெய்யசாயைநோய். தனையகன்றொழிதலு ந்தசரதப்பெயர், புனைமனுமன்னவன்புதல்வனைகையோ, டனையதொன் னகரியினகத்தைநண்ணினன். (கூ)

திரைசெயுங்காவிரித்தீர்த்தமூடிப்பின், றரைசெயுந்தவப்பயனென்னத் தங்கிய. விரைசெய்பஃறீர்த்தமும்விழைந்துதோய்ந்தனன், வரைசெய்பொ ன்வில்லிமுன்வணங்கினனரோ, (கo)

அரிக்குரற்கிண்கிணியலம்புஞ்சீறடி, வரிக்கயற்கண்ணகிலாண்டவல் லியைத், தரிக்குமெய்யன்பொடுசார்ந்துதாழ்ந்தனன். பரிக்குமுள்ளோகை யம்பரவைதோய்ந்தனன். (கக)

கனிவொடுங்கோயிலைக்கையகன்றவண், முனிவராரிருந்தவர்முன்வ ணங்குபு; துனிவுசெய்சாயையங்தொலைவுகூறிஞெ, னினிதெனக்கேட்டவ ரிராமற்கோதுவார். (கஉ)

தாங்கியபெரும்புகழ்த்தலைனுத்தீர்த்தமு, மோங்கியமூர்த்தியுமுசதமத தன, வீங்கிவணலகையேய் ராக்கதம்பிணி, தீங்கெனப்படுவனயாவுஞ்சேர் தரா. (கங)

ஆதலினீங்கு்ருதப்புறத்தினே, பாதகப்பழிபுருப்பாறிற்றிங்கசர் நீதவிர்தாினுநும்யாங்குநீங்கவே, யாதுசெய்தக்கதீங்கதுசெய்ந்தலே. ()

செய்யித்தைசிவலிங்கப்பதிட்டைசிந்தையைவய்த்தையசிவன்மா ட்டுநீர்மலர், பெய்ய்த்தைபேணுரிப்பூசைப்பேற்றிஞர், கொய்யத்தைநீங் த்தொடர்கொலையையென்றனர். (கரு)

துறவர்களின்னணந்தொகுத்துக்கூறலு, மறம்வளர்திருநகரயோத்திகாவ ல, னுறவிகல்கடந்தவனேங்குபேரருள், பெறவடிப்பூசனைபேணவெண்ணி ஞன். (கசு)

இதுமுதல் (ரு) செய்யுள்இராயர் சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்துவணங்கல்

வேறு.

அங்சதன்றனைக்கூவியருட்சிவலிங்கந்தாமேனுன்
றிங்குநீகொணர்தியாலென்றேவினனிருப்பைசசூழற்
றங்கியதீர்த்தமொன்றுசந்நிதிதனக்குமேல்பாற்
பொங்கழகெறிப்பக்கண்டுபோந்தவண்வசித்தாஞக (கஎ)

கேண்மைமிக்கருளுஞ்சாரக்கிராமமால்வரையைசசார்ந்து
மாண்மதியறிவிற்றேர்ந்துமரசதுவிலிங்கங்கைக்கொண
டேண்மலியிராமன்பாங்கரெயதிருனிராமனிப்பால். (சஅ)

சிற்பநூல்விதியினற்றுற்சிவலிங்கத்தளவைக்கேற்டக்
கற்பகிர்ந்தனையதீர்த்தக்கரையின்மேல்பாங்கர்க்கோயல்
பொற்புறவமைத்திட்டாத்தன்புகன்றநூல்விதிய ற்புபித
தற்பகங்களியபூசையாற்றினன்பரசலுற்றான். (சகூ)

வேறு.

இதுமுதல் (ரு) செய்யுள்இராமர்சிவபெருமானதுபெருமைகூறல்.

ஏறும்வன்கணங்கட்கிறையவனுய்மையாவெவர்க்குமுத்தமனுய்
மறுவில்வலிமிக்காரெவர்க்கும்வலிமிக்குடையவீரனைப்
பெறுதற்கரியசவிக்கெல்லாம்பிறங்குங்கவியாமைங்கரனைத்
தெறுவல்வினைகடெறவளித்ததேவதேவன்சரணடைந்தாம். (உ0)

வேதமுடியுங்காணரியவிமலானந்தப்பெருசொளியை
யேதமுயிர்கட்கறப்பண்ச்கூமெங்குநிறைந்தபராபரனைப்
போதமகன்றேரேகமாய்ப்புசித்துமேலாம்போகததைச்
சாதல்பிறப்பிற்றலைப்பட்டதமியேனுரைப்பதெவ்வாறே.

இவ்வாறுவளஞ்சிறந்தவிரும்புலியூரெனும்பதியி
னெவ்வார்கடிறையளப்பவொருமதிவெண்குடைகவித்துச்
செவ்வாய்மையரசாளுஞ்செங்கோலினொருசோழன்
றவ்வாதமன்றமிழ்தின்றெருழும்புபுரிசுபதேவன், (எ)

மன்னவற்குத்திருமனையாள்வாய்ந்தபெருங்கற்புடையாள்
கன்னியர்களரசென்னுங்கமலவதியெனும்பெயரா
ளின்னவர்பாலுலகுய்யவெம்பெருமானருள்செய்த
வன்னவரத்தாற்சிலம்பியமரனுதிப்பானுனன். (அ)

இருதிங்கள்சுபதேவனெழில்வயிற்றிற்சுவையொடும்போ
யொருதிங்கள்புறங்கொடுக்குமொழிமுகத்தாள்வயிற்றேறி
வருதிங்களொருபஃதும்வளர்ந்துபிறந்தறிந்தோன்றோர்ப்
பொருதிங்கணரசாண்டுபுரிந்தபணிபுகல்வாமால். (கூ)

## வேறு.

மன்னவர்திறைமுன்னிட்டுபலரடிவணங்கிச்சூழ்த
தொன்னிலங்காவல்பூண்டசுபதேவனென்னுஞ்சோழன்
றன்னருட்குரவன்சாரத்தாளிணைக்கமலந்தாழ்ந்து
நன்னயமொழிகளார்த்திநகைமுகத்திதனைவேண்டும். (க0)

அடியனேன்மக்கட்பேறிங்காதரித்தரியநோன்பு
நெடியவனறியாமுக்கணிருமலற்குறித்துச்செய்தேன்
படியிலப்பயத்தான்மைந்தர்ப்பயப்பதற்கையமின்றே
யடிகளப்புதல்வர்நல்லாரறநெறிபருளுகென்றான். (கக)

வெற்றிவேலரசன்வேண்ட வினைத்திருக்கிரித்தமேன்மை
யுற்றவாசிரியன்சாலவுவந்துமன்னவர்கணேற
பற்றுநூல்விதிகளெல்லாம்பயிற்றதுந்தெறிதிசெல
றற்றமில்விதிகள்சாலவடைவினெற்கிளக்கப்புக்கான். (கஉ)

வைதிகஞ்சைவமென்னவகுத்துறையிரண்டன்பாட்டு
மெய்திடுங்கிழமையாளரின்னுயிரென்னவோம்பிச்
செய்திடத்தக்கவானதிருவளர்கருமமீரெட்
டெய்திதந்தருளுமீசனுரைத்திடப்பட்டுநிற்கும். (கஙு)

சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய சிவாகமம் இருபத்தெட்டி லுள் (க0) வது சுப்பிரபேதகமென்னு மாகமத்திற் கூறியவாறே - இருது சங்கமனமுதல் விவாக மீருகவுள்ள நாமங்களை இச்செய்யுளிலும் - பின் வரும் (சச)வது செய்யுள் முதல் (கசு0)வது செய்புள் வரையினு மேற் கூறிய கிரியைகளின் பேதங்களை சித்தப்பரத்தில் அரசுரிமை செலுத்தியசுப தேவனென்னுஞ் சோழமகாராசனுக்குத் தனதாசிரியனுற் கூறியவற்றைக் கண்டுகொள்க.

பூணிருதுசங்கமநம் கருப்பாதாநம் புஞ்சவநம்சிமந்தம் சாதகன்மம். பேணுமுத்தாபநம்நாமகரணம்அன்னப்பிராசநமேபிரவாசம்பிண்டவிர்த்தி. காணலுறுஞ்சவுளம் உபநயநம்காண்டோபக்கிரகமணங் காண்டமோசநஞ் சேர், மாணுசமாவர்த்தநமே விவாகமின்ன வகுத்தபதினுறுமெனமதிக்கமன்று. (கச)

பின்னரிந்நூல் * பிரேதசமக்காரத்தோடு பிறங்கு § சபிண்டீகரணம் பேசுமீங்குச், சொன்னவற்றுளுத்தாநம் சாதகன்மத்துறையினுஞ்சோ றூட்டுதலிற் பிண்டவிர்த்தி, தன்னையுநல்லுபநயநந்தனிற் காண்டோபக் கிரமணந்தன்னையுமடக்கித்தகநூலொன்று, ளன்னர் ‡ விண்டுபலியசுபத் திரண்டுங்கூட்டிநவிலும் விண்டுபலிசிமந்தத்தினண்ணும் (கரு)

மறையவர்முன்மூவர்க் குந்தீக்கைபுண்டேல் வைதிகந்தாந்திரம் விர விவருத்தலாகு. மறைதருதாந்திர மொன்றாற் புரிந்தருளுபகாமமுமருட்டீக் கையில தாயின்வேத, முறையுளிச்செய்திடன்முறையாம்பின்னுென்றீக் கைமுற்றின னேலாகமத்தான் முடித்தலேயா, கிறைதருதாந்திரத்தியற்று ராயிற்றீக்கைநெடும் பயனின்றுந்தீக்கைநிகழ்ந்துளார்க்கே. (கசு)

தீக்கையிலாச்சூத்திரர்க்கு மனுக்களின்றிச்செய்வதுதாந்திர விதி முன்செப்புநால்வர், நோக்கியமந்திரமுரைத்தருளுநான்சா னொறிப்பரித் தேர்மன்னவனேநவலச்சிகளா, யாக்கமுறும்பிராணவமுன்னமோந்தம்பார் ப்பானரசன் சுவாசாந்தம் வழடந்துஞ்செல்வந், தேக்குவணிசன்வவுழடாந் தம்பின்னுென்றேத்தனம ஞ்சிறந்தமனுவாறுண்மாதோ. (சள)

அங்கிகரத்தந்தணரேடியாராக வலைசடற்பாயலிற்றுயின்றனடியாரா கத். துங்கமருடீக்கையிலரேவன்னோர்க்குத் தூயபிரணவமின்றிநமோந்த மாகத், தங்கியிடுந்தேவதோத்திரத்தைச்செய்துதகுங் கிரியையியற்றுவது தகுதியாகுங, கொங்குகமழ்ந்தினவண்டின்குழுவையோம்புங்குருமலர்த்தா ர் துயல்வருந்திண்குவவுத்தோளாய். (கஅ)

தூயவுபநயனமில்லாவொருமூவர்க்குஞ்சுத்திரர்க்குபடவார்க்குநமோ ந்தமாக, மேயபிரணவமின்றிப னுக்களெல்லாம்விளம்புதலாந்தத்தமக்குவி தித்தவாறே, யாயமனுவாற்கிரியைபுரியாராயினும்பயனுமில்லையவரங்கைப் பட்ட,பாயபுனல்சா னம்பொருள்களெல்லாம்பசுவிறைச்சிநுகர்ச்சியெ னப்படுநல்வேந்தே. (கக)

புரையகற்றுந்தீக்கையுள்ளான்றீக்கையில்லாப்பூவையைக்கைப்பிடிப் பினவன்போற்றுமன்ற, லுரைகருப்பாதானமுதற்கிரியையெல்லாமுயர்ந்த வாகமவிதியாலுஞற்றப்வேண்டும்,வரைநிகர்த்ததடந்தோளாயனையமாதின் மைந்தருக்கும்வழியதுவேயாகுங்கணடாய், கரையனுலோமாகியர்க்குமனு க்களின்றிக்கரிசறுக்குந்தந்திரமாத்திரமேயாகும். (உ0)

மறையவர்முன்மூவர்க்கு முரியவாகவருஞ்சவுசமாசமந மலிநீராடல், கறையகலுஞ்சந்திதருப்பணமேயோமங்கரைமறையோதுதல்சோமயாகயா தி, நிறைகருப்பாதாநாதிதசநமாதிநித்திய நைமித்திகமென்றிணைக்களெல் லா, மறையுமனுலோமருக்குவேதமார்க்கத் தடாதனவாமழலுயிர்க்குடப் வேன்மன்னு. (உக)

* பிரேதசமக்காரம் - பிரேதத்தைத்தகநமாதியசுத்திபண்ணுதல், § சபி ண்டீகரணம் - பிதாமகன் - பிரபிதாமகன் பிரப்பிரபிதாமகன் இம் மூன்றுபி ண்டங்களுடனேகிரியைக்குரியவன்றன் பிதாவினுடைய பிண்டத்தைச் சேர்க்குங்கிரியை ‡ விண்டுபலி - விட்டுணுபலி.

சாதகன்முனாமமிடலன்னமூட்டல் சவுளமுபநயனமெனுஞ்சமக்காரங்
கண், மேதகவெய்திலராயினுயர்மூவர்க்கும்வேதமோதுதலென்றுமேலாந்
திங்க, ளோதுசமக்காரங்களுற்றாரேனுமுரைத்ததமதொழுக்கநிலையொழிந்
தாராயி, னோதமறச்சுதந்திரமாய்க்கிரியையொன்றுமிலையாதாலவர்க்குலக
மேந்துதோளாய். (உஉ)

வருணநிலையொழுக்கங்கள்வழீஇயவன்னோர் மலந்துமியச்சிவானந்த
வாரிமூழ்குந், திருவினரையடுத்தொழுகிச்சுத்தராயிற்றிகழ்சருமஞ்சுதந்திர
மாய்ச்செய்தன்மேவுங், சரிசில்சமக்காரமைந்துமெய்தானாயிற்கரைந்தவ
வாந்தரசைவனறனக்குங்கன்மத், துரிமையிலையாதலினற்கிரியையெல்லா
மொழியாமையவனுக்குமுளுற்றல்வேண்டும். (உங)

துலக்கமுறுந்தீக்கைதனக்குரியராவார்தொகுத்தமறையோராதிமூவர்
தாமுங், கலக்கமில்சற்சூத்திரருமுரியராகக்கரைந்தவனுலோமருமென்றிவ
ரேநூல்கள், விலக்குமசற்சூத்திரற்கும்வளர்நீசர்க்கும்வெய்யகாருகர்க்குஞ்
சாங்காரர்க்குமேனை, யலக்கணுறுமிழிகுலத்துளமர்ந்துளார்க்குமருட்டீக்
கையொருநாளுமடாதுவேந்தே. (உச)

தள்ளுமசற்சூத்திரனைமுதலானோருந் தக்கசிவபத்திமிகுந்துயர்ந்தோர்
தம்மை, நள்ளியவர்பணிபலவுநயந்துபாதநறும்புனன்மிச்சிலுநுகருநன்மை
யெய்தி,னெள்ளுவிர்கண்மலமைந்துங்குலத்தினன்மையெய்திமதுவூனுகரா
தரத்திற்சிந்தை,விள்ளிலதேல்விளங்கசற்சூத்திரனுமன்றவேந்தர்குலத்தோ
டொப்பன்வேந்தர்வேந்தே. (உரு)

எத்தலுறுந்தீக்கையுள்ளாரெவரேயாக வியம்புவருணச்சிரமவொழுக்
கந்தன்னை, நீத்தனரேற்றீக்கையிலாதவரோடொப்பர் நீத்தவொழுக்கத்
தொருநால்வருமந்நன்மை, பாத்தியமாதருமலியுஞ் செவிடும்பீத்தும்பயில்
குருடூமையுந்தீக்கைக்குரியவாகா, சூத்திரனுமொழுக்கமுறின்மறையோ
னொப்பான் சூத்திரனொப்பான் மறையோனொழுக்கம்விட்டால் (உசு)

துங்கஞ்சேர்தீக்கையொழுக்கத்தினன்ற சூத்திரன்சற் சூத்திரனை
யொத்திற்சாலாப், பங்கஞ்சார்ந்தவனசற்சூத்திரனாஞ் சாதிப்பகுப்புவேறிலை
யிருவர்தமக்குமூவர்க், கெங்கெங்கேயாகமத்தின் விதிக்கப்பட்டதியாத
தும்மற்றங்கங்கே யெழுசேர்தீக்கை, தங்குசூத்திரர்க்குரித்தாயில்வேலோ
ச்சித்தரியலரைப்புறங் காணுந்தறுகட்கோவே. (உஎ)

மூவருக்கும்வேதமந்திரமெங்கெங்கேமொழிந்திடப்பட்டனவவற்றிற்
கெல்லாமாங்காங், கோவிலருள்வளரிதயமனுவைப்பின்னோருரைக்கமனு
வனைத்தினையுமுரைக்கவந்த, மேவுபயனனைத்தினையுங்கொடுக்கவல்லவி
ழுத்தகுமந்திரமதுவாதலின்வேன்மன்னாதாவின், மறையவர்தமக்கேயாசீர்
வாதஞ்சாற்றுமுறையேபுரிதற்றகுதியாகும். (உஅ)

அரசர்முதன்மூவர்க்குமாசீர்வாதம கத்துறுமாவனையேயாமதுவேதெ
ன்னிற், பஞ்சுறுகுருடன்முதலியகாப்பாகப் பண்ணுவதுபார்த்திபனேபத்
தோடாறு, கிரியைகளுக்குரியரிவரெனவு மந்தக்கிரியைபுரிநூன்முறையும்
கிளந்தாமிப்பாற், கிரியைகளுக்கின்றியமையாதசாட்புங்கிளருமங்குராப்ப
ணமுங்கிளப்பாமுன்னர். (உக)

## வேறு.

இட்டகாமியமியாவையுஞ்சித்திக்கும்பொருட்டுக்
கட்டுவார்கரஞ்சூத்திரங்காலநற்கிரியை
தொட்டநாண்முதனிரவைத்தொடங்கிநா
ளொட்டுகாலையேவினைசெயுமுன்னியற்றென்றும். (ரு0)

பொருந்துபுண்ணியாவாசநமுந்துறப்புரிந்து
திருந்து * தண்டிலநெல்லினற்செய்திடைக்கமலம்
வரைந்துவெண்பொரிதிலங்குசையலர்கண்மேற்பரப்பி
விரிந்தவட்டத்துப்படலிகைமீமிசையிருத்தி. (ருக)

பொழிந்துதண்டுலந்தாழையின்புதுக்கனிபூகி
கிழிந்தவாடினவில்லியகிளர்நுதிவளைந்த
வொழிந்தமெல்லிலைப்பாகுவைத்தொளிர்பொன்னுலியன்ற
செழுந்தண்பாசம்வெண்சந்தனந்திமிர்ந்துடன்வைத்து (ருஉ)

புரிந்தபுண்ணியாவாசநப்பூம்புனல்புரோக்கித்
திருந்ததண்டிலத்திணங்கவாதாரசத்தியையுந்
தெரிந்தவட்டத்திண்காலின்முத்தத்துவத்தினையும்
பரந்தவான்பிரகிருதியைப்படலிகையிடத்தும். (ருரு)

எழுகோடிமாமனுவையுமிலகரிசியினுந்
தாழைவான்கனித்தந்திமாமுகனையுமதியைக்
கேழில்பாகடையினுங்கிளர் † இலகுளீசரனை
வாழிநீற்றினும்வார்ந்தசூத்திரத்தனந்தனையும். (ருச)

பூசைசெய்துசீடரைப்புரோக்கணமுறப்புரிந்து
தேசிகன்றிகழநாமிசையங்குட்டஞ்செறியப்
பாசநங்கெடுத்தாடவர்பயில்வலக்கரத்தும்
பேசுமங்கையரிடக்கரத்தினும்பெறத்தரித்தல். (ருரு)

ஒள்ளிதாகியசனகசூத்திரமுதவாதேல்
வெள்ளிதாகியபட்டுநூற்பாசமுமேவு
நள்ளுறுதெனிலதுவுநற்பருத்திநூற்கயிறுங்
கொள்ளலாகுமாற்குருமதிக்கவிகைமன்னவனே. (ருசு)

கவசமந்திரத்திணக்கியகயிற்றுறமுடிய
னவிர்வெண்பூதிமூலத்தினாலணிவதுமுறையாம்
புவிபுரப்பவபுண்ணியாவாசநங்காப்பென்
றிவைசெயாதுசெய்கருமங்களெங்கணுமிலையே. (ருஎ)

அங்குரம்புரிவினைகளுக்கதுபுரியாரேன்
மங்கலம்பயனுறவிலக்கியுவருவினைக்குத்
தங்கவங்குரம்புரிதரிற்சகலமுங்கேடா
மிங்கணிவ்விருதிறத்தையுமியம்புதுமன்றே. (ருஅ)

* தண்டிலம் - பீடம்.

† இலகுளீசரன் - பிரதிவியாதாரத்தில் தெய்வமாயிருக்குமீசன்.

## வே று.

தருமீரெண் கிரியையுளும்புஞ்சவநஞ்சீமந்தஞ்சாதகன்மம்
வருநாமகரணஞ்சோறூட்டல் * உபநிட்கிராமணமுநீக்கி
மிருமேனைக்கிரியையினும் $ பவுட்டிகத்தும்வேறுமங்கலத்தின் மாட்டுந்
திகழ்தேவதாபநத்துமேனையதாபநத்தினுஞ்சீர்விழாவின் மாட்டும். (௩௯)

‡ சம்புரோக்கணநபநஞ்சிவதீக்கை தருந்தீக்கையபிடேகங்கள்
வம்பதாமனைபுகுதல்புதுநகரம்புகுதல் வளர்விமாநமாக்கல்
வெம்பவார்செவி துளைத்தல்வேழவிழாவேழத்தின்மருப்பையீர்தல்
பம்புவான்படையெடுத்தல்பால்குடித்தல்பட்டாபிடேகம்பண்ணல் (௪0)

வேள்விபவுத்திரமினையகிரியையினுமுளைவித்தல் விதியதாகுந்
தாழ்வுபெறுசிராத்தமுதலசுபத்துஞ்சாந்தியினுமவிசாரத்தும்
வாழ்வுபெறுதேவயாத்திரை மாட்டுஞ்சூத்திரகன் மங்கண்மாட்டும் [ன்று
பாழ்வினையாமெய்ப்பொருளும்பகர்ந்தவங்குராற்பணத்தைப்பண்ணின்

திங்கள்பயிர்வளர்த்தலினலதர்சூரியவிரவகத்துச்செய்தனன்றுந்
தங்குமிரவொழிந்தசிறுகாலைபுமாஞ்சவுளமுபநயநம்வாத்துக்
சன்மமினவடசலன்றிக்கைச்சொளார்தேவருச்குங்கங்குலன்றி
யங்குரம்வித்துதல்புரியாருமறையாகமவிதியையறிந்துளோரே. (௪௨)

நித்தியநைமித்திகமேபிரதிட்டைவிழாவிடுநீள்சங்கிராந்தி
சத்துருசங்காரங்கிரகணங்கருப்பாதாநாதிதகநமாதி
மெத்துகழுவாய்பவுத்திரந்தீக்கைமிகுசாந்திசம்பத்தோமங் [தே. (௪௩)
கொத்துமற்றனைத்தினுஞ்செந்தீவளர்த்தன்முறையாகுஞ்சொற்றவேந்

1 வதை - இது முதல்(௬௩) செய்யுள் - இருதுசங்கமனம்-இளவ-
நாயகிபின்ருதுகாலத்தில் நாயகன் கூடும்படி செய்யுங்கிரியை.

## வே று.

இருதுசங்கமமின்றெனிற்கருப்பமின்றதனு
லிருதுசங்கமத்தியலேயுமியம்புதுங்கேளாய்
பொருவின்மன்னவபூத்தவண்மூன்றிரவொழிய
மருவுதண்புனல்விதியுளியாடுதல்வழக்காம். (௪௪)

மல்குவைகறையினன்றிமாலையாமத்திர்பூப்பில்
புல்குமத்தினமுன்னுசமூன்றுநாட்புறத்தேவைகிப்
பல்கியகான்விற்றாநீர்படிந்துகொண்கனேயுள்ளெண்ணிப்
பில்கொளிப்பரிதிநோக்கிப்பின்மனைக்சேறல்வேண்டும். (௪௫)

* உபநிட்கிராமணம் - முற்கூறியபதினறனுளொன்றுகிய பிரவாசம்
$ பவுட்டிகம் - புஷ்டிப்படுத்துகை.
‡ சம்புரோக்கணநபம் - புரோட்சித்து நீராட்டுதல்.

பிரிவில்சண்டாளியென்றுபிரமகாதகியேயென்று
* இராசகியென்றுமூன்றுமியம்பியமுறையேபூப்பு
விரவியமுதனாளாதிமேவியமுந்நாள்காறுங்
கரிசறப்பூத்துள்ளார்க்குக்கட்டுரைத்திடுவதாகும். (சகு)

ஒளிநகைபுறக்கோறின்றலொருபொழுதன்றியுண்டல்
வளமனைகாத்துவைகல்வளர்பகலுறங்கல்பேச
வெளியுறுமாதரார்க்குமேவுறுவேற்றிவேந்தே. (சஎ)

மறுவலும்புனலிற்றோய்ந்துமனைவளர்பாத்திரங்க
ளூறுகரமுறுமையன்றுமுழுவதுமுறைந்தைந்தாநா
ணறுவிரைப்புனலிற்றோய்ந்துநற்பணிக்குரியளாவாள். (சஅ)

முந்தியபூப்பேயாயின்முற்றியநான்காநாளிற்
பிந்தியுநறுநீர்த்தோய்ந்தபேதையையலங்கரித்துக்
கந்தமென்புனலிற்றோய்ந்துகாந்தனுந்தூயனாகி
வெந்தநீறுருத்திராக்கம்விழுமியவணியுந்தாங்கி. (சகூ)

புண்ணியவாசகத்துப்பூம்புனல்வித்தியாங்கத்
திண்ணியமனுவாலாசான்றெளித்திடப்பட்டவாய
நண்ணுறமாதைவைத்துநவின்றுசங்கிதையைக்கும்பத்
தண்ணலைப்பூசையாற்றியழலிடையோமஞ்செய்து. (ருO)

ஆயிரந்தெட்டேயாகவறைபுநூற்றெட்டேயாக
மாயிரும்பிரமமைந்தின்வயங்கவாகுதிசெய்தாலின்
மேயமென்முகுழுழுந்தைவிரைத்தபால்சொரிந்தரக்கிப்
பாயவத்திரத்திலிட்டுப்பரமனைத்தியானம்பண்ணி. (ருக)

அழுகையேயிருமறும்மலாவித்தல்வெகுளல்வாசச்
செழுமுடிதுளக்கலின்றித்தெரிவைநேரிருப்பச்செய்து
விழுமியமைந்தன்வேண்டின்வியன்வலநாசியுள்ளே
யொழுகுறப்பிழிந்துவாயாலுண்ணுவித்திடுதல்வேண்டும். (ருஉ)

மாசறுபுண்ணியாகவாசனமீட்டும்பண்ணித்
தேசவிர்குரவன்பூசைசெய்துவேதியர்முன்னோரைப்
போசனம்பண்ணுவித்துப்புசிப்பதுவிதியாமேனை
பேசறுகிரியையீற்றுமின்னணம்புரிகமன்னோ. (ருங)

அற்றைநாளிரவிற்பாற்சோறீயின்றிருவோருந்தம்மை
முற்றுமாய்நிறைந்தவீசன்முயங்கருட்சத்தியென்னப்
பற்றுறநினைந்துமைந்தர்ப்பயத்தலேயேதுவாகத்
தெற்றெனமதித்துமாரன்றிகழ்கலைநடாத்தல்வேண்டும் (ருச)

* இராசகி - வண்ணாத்தி.

## வேறு

பூத்துநீராடியநாண்முதலாகப்பன்னிருநாள்பூவைமார்க்கு
வாய்த்தசூலுறுங்காலமாதலினலந்நாளுண்மகமேமூலம்
பாத்தசீர்விரததினந்தனக்காகாநாள், §பஞ்சபருவமெல்லா
நீத்துநூல்விதித்ததினம்புணராமேனேற்கருவொன்றுநீக்கினும். (௫௫)

இருதுவின் சங்கமம்புகன்று மினியெறுழ்த்தோண்மன்னவனே யியம
க்கேளாய், திருவளருஞ்சுபக்கிரியையனைத்தினுக்கு * நாந்திமுகஞ்செய்
தல்வேண்டும், மருவுவதுவையின்காறுங்கிரியையெலாம் பிதாபுரிகவைந்
தனப்பாற், கிரியைபுரிவதுவழக்காங்கிளர்கருப்பாதாநவிதிகிளப்பாமன்றே.

இரண்டாவது இதுமுதல் (௫) செய்யுள்-கருப்பாதாநம்-இவை கருப்பந்தரிக்குபடி செய்யுங் கிரியை.

கருப்பமியைந்தமைகுறிப்பானறிந்தநாயகன்விதிசெய்காலமந்தத்
திருப்பொலியுமதிவாரந்திங்கள்புதன்குருவெள்ளிசிறந்தநாள்க
ளருத்திமிகும்புணர்பூசம்பூசமுரோகணிசதயமத்தமோணம்
வருத்தமிலுத்திரத்திரையாமான்றலைசித்திரையனுடம்வங்கஞ்சோதி (௫௭)

ஈங்குரைத்தகிழமையொருநாளேனைக்கிரியையெவற்றினுக்குமாகு
மோங்கியபூரணைபதினன்கொருபஃதட்டமியாறைந்தொருநான்கின்ன
தீங்குதிதிகளினெட்டாமிடஞ்சுத்தியாங்கருப்பசிலைசீமந்தம
வீங்குபுஞ்சுவநம்வதுவைவேள்விகுடிப்புகன்மனைக்குமேவநாள்பார். (௫அ)

இல்லவள்சூல்வயிற்றினளேலிருங்கணவன்றனைமேற்றிடுதல்கோயி
லில்லமுதலியவிழைத்தல்விழவுமுதற்கிரியையசெயலின்றோர்க்கன்றிப்
புல்லசுபக்கிரியைசெயறீர்த்தயாத்திரைபிறர்பால்புசித்தல்சார்ந்த
நல்லகடலாடறலைமழுக்கலிவைசெய்யற்கநாமவேலோய். (௫௯)

கரிசொழியமுதற்கருப்பம்வயிற்றிலுறுமாதருச்சேகருப்பாதாநக்
கிரியையொடுபுஞ்சுவநஞ்சீமந்தமிவைபுரியக்கிளத்துநூல்கள்
வரிசையுறப்பின்னவர்தம்வயிற்றிலுறுசூலினுக்குவகுத்துமுன்னர்ப்
புரியலுறுங்கிரியைகளேபயன்கொடுக்கும்வெவ்வேறுபுரிதல்வேண்டா. ()

சத்தியோசாதத்தினிருநான்குதலைப்பெய்தசதவோமஞ்செய்
தொத்தபாலயிர்நறுநெய் $ யவையுழுந்தும்விராயீசத்தோமமாற்றி
யெச்சமானதைமனைவிவயிற்றிடைத்தற்புருடமனுவியம்பிக்கையை
வைச்சுநாயகனவளைநுகர்வித்தலாம்புஞ்சுவநமுறைகேளாய். (௬௧)

மூன்றாவது - இதுமுதல் (உ) செய்யுள் - புஞ்சுவநம் - இவை ஆண்மகவுபிறக்குமருந்துபிழியுங்கிரியை. இரண்டாமாதம் செய்யப்படுவது.

கிழவனிறந்திடிற்கிழவன்கிழத்தியிவர்தந்தையரிச்கிரிகைசெய்க
கிழமையுறுமவருமிலராயினவருடன்பிறந்தார்கிளர்ந்துசெய்க
கெழுவலுறுமவருமிலராயினவர்கிளையினுள்ளார்யாவரேனுங்
கழுமலறப்புரிகவிதுசீமந்தமாதிகட்குங்கடவதாகும். (௬உ)

---

§ பஞ்சபருவம்-மாதப்பிறப்பு-வருடப்பிறப்பு அமாவாசை-அட்டமி.
* நாந்திமுகம்-சுபக்கிரியைகளிற்பிதிர்தேவதைகளைக்குறித்துச்செய்தல்.
$ யவை - ஓர் தானியம்.

வேறு.

இருமதிநான்குமதியினுயிரநூற்றெட்டெனுமிரண்டனுளொன்று
மருவுறவோமம்வாமதேவத்தின்வயக்கியம்மனுவினலாலி
னுருவளர்முகிழ்பாலுழுந்திவைமுன்போலெண்ணொடிநாசியிற்பிழிக
பொருவருபுஞ்சுவநமிதுவாகும்புகலுறுஞ்சீமந்தங்கேளாய். (௬௩)

நான்காவது - இதுமுதல் (௪) செய்யுள் - சீமந்தம் - இவை மூன்றிடத்து விளர்ப்புள்ள பன்றிமுள்ளினால் தலைமயிரை வகிர்ந்து செய்யுங்கிரியை. இஃது ஆறுமாதஞ்செய்யப்படுவது.

ஈரிருமதியினறினெண்மதியினெழில்வியாகிருதிமந்திரத்தின்
சீரியவகோரமனுவினூற்றெட்டெச்சிறப்புறவாகுதிபுரிந்து
கூரியதருப்பையுதுப்பரக்கொம்புகோலத்தின்முள்ளிவைகூட்டி
நேருறுவித்தியாங்கமந்திரத்தானெற்றிமுன்றொடுத்துமேலிழுத்தல். (௬௪)

புதியவதிரங்கள்பூந்தொடைகலன்கள்பொற்புறவணிந்துழுந்தாதி
முதிரொளியழலின்முன்புபோலோமமுடித்துயர்சிவமனுவாற்கை
யுதரம்வைத்துரைத்தல்சீமந்தமாகுமுலகமாண்மன்னவவயிற்றுப்
பதிதருகருப்பமெறும்கொளவிண்டுபலியையீங்கியற்றுதல்வேண்டும். (௬௫)

வேறு.

இருடிகேசன்கோவிந்தனெழில்வாமனநாராயணன்சி
தரனற்றிருவிக்கிரமன்மாதவனேமதுசூதனன்றாமோ
தரனற்பதுமநாபனெனத்தக்கவிண்டுவெனும்பெயரா
லரியைக்காலைநண்பகலினுவாகநஞ்செய்தர்ச்சித்து. (௬௬)

அகோரமனுவால்வியாகிருதியானூற்றெட்டாகுதியு
முகாதவன்பின்விண்டுமனுவுரைத்துச்சருவாறுகுதியு
மிகாநெய்யினிலாறுகுதியுமிழைத்தெண்பிரமசாரியரை
விகாரமறச்சோறூட்டுதலேவிண்டுபலியாம்வேல்வேந்தே. (௬௭)

ஐந்தாவது - இதுமுதல் (அ) செய்யுள் - சாதகன்மம் - இவை புத்திரோற்பத்தியாயகாலத்திற் செய்யுங்கிரியை,

தருமமாதிமழவினுக்குத்தழையும்பொருட்டெச்சாதகன்மம்
புரியலுறுவோர்மகவுயிர்க்கப்பொருந்துந்திசையின்மனைபுதுமை
பரிவின்மெழுகிக்கடுகெள்ளுப்பம்பப்புகைத்துநன்முகூர்த்தத்
துரியமகளிரொடுமெங்கட்கருப்பவதியையுறத்துகவே. (௬அ)

சருமன்வருமன்றனன்றாசன்சார்த்திவழங்குமியற்பெயர்கள்
பிரமன்முதனல்வருணத்துப்பிறந்தோர்க்கெல்லாமிடப்படுமொ
லிரவினகத்துமகவுயிர்ப்பினீன்றோனிரவென்றிரானுடனே
பரவுபுனலிற்றுடுமெனப்போய்ப்பாய்ந்துமுழுகிவினைபுரிக. (௬௯)

மக்கட்புவத்தினெக்கியத்தின்மாதம்பிறக்குமமையத்திற்
றொக்குச்சுடரைமணியசவந்தொடருங்காலத்திரவிடைநீர்ப்ச
புக்குப்படியவளர்மிருதிசாரம்புகலப்பட்டதுகாண்
மிக்குப்பகையின்வலிமுருக்கிவிரிநீருலகம்புரக்கின்றோய். (௭0)

பிறந்தவுடனன்றெனின் மூலைப்பால்பேணிக்கொடுக்குமுன் கொப்பூழ்
விறந்தநாளம்வீட்டிடுமுன் வெந்நீராட்டியுறுப்பனைத்து
நிறைந்தகுழவிமுகந்தாதைசிகரிலிதயத்தாற்கண்டு
சிறந்தமுதனையிரணியமாச்சிந்தித்திரும்பொன்வழங்குகவே. (எக)

சதமாகுதியத்திரத்தியற்றித்தழைந்தவாமமந்திரத்தி
னிதமார்காவற்பொருட்டிளவன் முகத்தைமீட்டுமெதிர்நோக்கிப்
பிதமார்பஞ்சப்பிரமங்கள்பகர்ந்துச்சினையேோந்தெழிற்புருட
மதமார்மனுவைவலக்காதின்மடுக்கவிஃதுசாதகன்மம். (எஉ)

வெல்லாறுநெய்தேன் மூன்றும்விரவிக்குழந்தைவாய்ப்பெய்து
மல்லன் மூலைகள்கழீஇவலப்பால்வயங்குமூலைப்பால்பிரசாதஞ்
சொல்லியருத்தியத்திரத்தாற்றொடர்ந்தவுந்திநாளத்தை
மெல்லவரிந்துபுறத்தொழிக்கவில்விட்டிலகுமணிப்பூணாய். (எ௩)

அருமைமகவின்சிரப்புறத்திலகோராத்திரத்தான்மணிக்கும்ப
மிருவியீரைந்தினமுமிருபோதும்பூசையினிதியற்றி
பொருவிலாபச்சத்தமனுப்புகன்று* பட்சாகுதிபுரிந்து
மருவுமரியாநந்தத்தாநெய்யாகுதியுமலிவித்து. (எச)

புருட்மனுவானூற்றெட்டாகுதியும்புரிந்திட்டரசிலையோ
ரிரைசெய்புருடத்தார்ப்பலியிட்டுவந்துவெள்ளைக்கடுகாறந்
நிசுதபவோமம்புரிககாமர்குழலிக்கிதுகாப்பாம்
பாவையுலகந்தடந்தோளிற்பரித்தோயுத்தாபனங்கேளாய். (எரு)

ஆறுவது - இதுமுதல் (௩) செய்யுள் உத்தாபனம். - இவை
அசுத்தமாகியவறை வீட்டினின்றும் சுத்தமாகிய வுயர்ந்தவிடத்திற்
குழந்தையைச் சேர்ப்பிக்குங்கிரியை.

மூன்றுதினத்துமைந்தினத்துமொழிந்தவேழாநாளிடத்து
மான்றகுழவிப்படுக்கையினையாற்றவுதறிப்போட்டிடுக
வேன்றவொருபதெனுந்தினத்திலிருநீராட்டிக்குழந்தைதனைச்
சான்றவேறுமனையகத்துச்சார்வித்திடுகதூயோரால். (எசு)

சாம்பல்புளிநெய்நெருப்பிவற்றூற்றகும்வெண்கலமாதிகள்புனித
மோம்பியறுவையேகாலியொலித்துத்தரக்கொண்டிலமலினந்
தேம்பமயமண்ணுண்மெழுகித்தேங்கப்புகைத்துமட்கலம்பா
யாம்பல்பொருளும்புறத்தாக்கியறலின்முழுகியிருவோரும். (எஎ)

பொருந்தவபசம்போற்றியறலாடிப்புண்ணியாகத்துப்
பரந்தபுனலாற்புரோக்ஷிக்கப்பட்டபுனலுமானைந்துஞ்
சொரிந்துமடக்கிற்குசையிட்டுதலங்குஞ்சிவமாப்பாவித்துப்
பரிந்துநகங்கபன்னிரண்டாநாளினுமம்பகருவதாம். (எஅ)

* பட்சாகுதி - பதினெட்டாகுதி.

## வேறு.

ஏழாவது - இதுமுதல் (சு) செய்யுள் நாமகரணம் - இவை பெயரிடுதலிற் செய்யுங் கிரியை.

திகழ்தருதசமிமுதலியமூன்றுதிதியினிற்புண்ணியதிதியி
லகமறநூற்றெட்டாகுதிமூலத்தாக்கியச்சுதஞ்சிரத்திட்டுப்
பகர்தருவெல்லமாதிமுன்போலப்பருகுவித்தருமகவினுக்குப்
புகழ்சிவவத்தம்வைத்தபின்னுமைம்புகலுகபுகல்வன்கேளாய். (எக)

வயங்குமாதேவன்மயேச்சுரன்கிருத்திவாசனற்பார்ப்பதிப்பிரியன்
றயங்குசிகண்டன்தேவதேவேசன்சங்கரனுருத்திரனீச
னயங்கொளும்பசுபதிமவசனேகாமநாசனன்சிவனெனுநாமத்
தியங்கியசனனாண்மதிக்கேற்பவிடுவதுமுறைமையன்னவனே. (அ0)

அம்பிகைபவானி*சுரார்ச்சிதைதாட்சாயணியரப்பிரியைபார்ப்பதியே
வம்பறுகிரிசைசிவங்கரி†யைமவதி‡உமையவண்மகாதேவி
நம்புறுகௌரியெனும்பெயர்பெண்ணினுட்டுவதாங்குருவின்றோர்
பம்பியகுடியினுள்ளவர்பெயரும்பன்னலாம்வேறுபன்னலுமாம். (அக)

ஆண்மகவினுக்குப்புதியநாமங்களமைத்திடினிரட்டையக்கரத்து [ம்
மேண்மலிபெண்ணுக்கொற்றையக்கரத்துமியம்புகவெவ்வகைப்பெயர்க்கு
பூண்மலிசிவானந்தமாச்சுகதெத்தபுத்திரற்கப்பொழுதேற்போ
னுண்மலிசாதகன்மமாதிகண்முன்னடாய்ப்பெயரிடுகொன்முறையால். (அஉ)

பெயருறுத்தியபின்னிருகரத்தானும்பேணிவெள்ளரிசிபாசறுகை
யியல்பதமுழந்தாள்புயஞ்சிரத்திடுகவினியொருபஃதெனுந்தினத்திற்
பயிலுமுந்நான்கிற்பத்தினோடாறிற்பல்குறுமங்கலப்பொருட்டு [வித்தியாம்
மயர்வறுவனப்பின்பொருட்டும்வார்செவிகளமைவுறத்துளைத்திடல் (அ௩)

மும்மதிவரைப்பிற்பரிதிகாட்டுதலுமுற்றியநான்மதிவரைப்பின்
விம்மியசெருத்தற்பசுவொருகிரணவெண்மதிகாட்டலும்பொருந்துஞ்
செம்மையினொன்குமதியிடைச்செல்வந்திகழ்தருமாயுளும்வளர
வம்மழவினுக்குநிட்கிராமணந்தானுற்றுதல்வேண்டுமென்னவனே. (அச)

எட்டாவது - இதுமுதல் (சு) செய்யுள் - பிரவாசம் - இவைகுழந்தையை யெடுத்துக்கொண்டு ஆலயத்திற்குச் செல்லுங்கிரியை. இக்கிரியைக்கு நிட்கிராமண மென்னுமோர் நாமம்.

## வேறு.

பத்தாமிடஞ்சுத்தியதாகப்பார்த்துச்சத்தியோசாதத்
தொத்தாகுதிநூற்றெட்டியற்றியுறுதன்மகவையலங்கரித்துப்
பெற்றான்சிவவென்றூர்த்துச்சிபிகைழதீர்புருடத்தான்மோந்து
மற்றோர்நால்வராலாசீர்வாதமரபிற்புரிவிக்க. (அரு)

தொடர்சீர்மாமன்மகவெடுப்பச்சுவத்திமுழக்கினொடும்வெளிப்பட்
டிடர்தீர்கோயிற்புகுந்துவிடையேற்றைவிடகாயினிமனுவா
லுடனேதெரிசிப்பித்துவிதியுளியேசிவனைமுருகனையும்
விடியாவன்பிற்பணிவித்துமீண்டுமனையினீறிடுக. (அசு)

---

* சுரார்ச்சிதை - தேவர்களாலர்ச்சிக்கப்பட்டவள், ‡ சிவங்கரி - மங்களத்தைக்கொடுப்பவள், † ஐமவதி - இமவான் புத்திரி.

ஒன்பதாவது - இதுமுதல் (உ) செய்யுள் அன்னப்பிராசனம் - இவை சோறூட்டுதலிற் செய்யும் கிரியை.

வருத்தாம்பிரவாசக்கிரியைமன்னுவன்னப்பிராசநங்கேள்
முகூர்த்தநாட்குமுதநாளேமுனிவின்மறையோர்க்கினிதூட்டி
மிகுத்தபத்தாமிடஞ்சுத்திமேவமகவையலங்கரித்துப்
பகுத்துப்பிரமாங்கம்பதிற்றுப்பத்தாகுதிவெவ்வேறியற்றி. (அ௭)

தேம்பாளிதத்திஞ்ஞகுதியுஞ்செய்தெஞ்செய்சியபாயசமெச்சி
லோம்பாதொழித்தவிளங்குழவிக்கூட்டன்முறையாருந்திங்க
ளாம்பார்த்திபனேயெண்மதியீரைந்தாமதியன்னிருமதியு
மேம்பாடாகவுருவேனும்விதியாம்பிண்டவர்த்தனங்கேள். (அஅ)

பத்தாவது - இதுமுதல் (உ) செய்யுள் பிண்டவர்த்தனம் - இவை சரீரத்தை விர்த்திசெய்யும் கிரியை.

பிரமசிரமந்திரத்தோமம்பேணிநூற்றெட்டிளமகற்கு
விரவுசகளீகரணத்தைமேவப்புரிந்திட்டாதியந்தம்
பரவுறூநற்பிரணவங்கள்பயின்றவியோமவியாபியினை
யுரமிக்குறவக்குழந்தைவலக்காதினுபதேசித்திடுக. (அகூ)

மதுநெய்நறும்பால்விராயமதுப்பருக்கமதுவென்மந்திரத்தா
விதுவின்வளருங்குழந்தைதனைமிசைவித்தூரியநாதியரோ
டெதிரில்சுவையினுணர்வார்கவீணமொழியுளூடற்கினிமை
முதிரவளருமுத்தராயணத்திற்சவுளமுறைபுரிக. (கூ௦)

பதினொருவது - இதுமுதல் கூ செய்யுள் - சவுளம் - இவைமயிர் வினைக்குச் செய்யுங்கிரியை.

கருவிற்கொருமூன்றுண்டினுமண்கதுவும்பிறவிக்கொருமூன்றும்
வருடமிகவுத்தமமஞ்சாம்வருடமேழாம்வருடமுமாம்
பொருவில்சவுளமிலையாய்நற்புரியுங்கிரியைக்குரிமையில
யுருவில்கிரியைக்குரிமைசெய்ஞோராண்டினுள்வேண்டியவெழுதாம். (கூக)

மாதாவயிற்றிற்சூலெந்துமதியின்மேற்பட்டிருந்தாலு
மாதாபிதாவென்றிவருயிரைமறலிகவர்ந்தானாயிடினுந்
தீதாஞ்சவுளம்புரிகிற்பிற்செறிசூலுயிர்த்தபின்னானு
மேதாமெனச்செப்பியவாண்டொன்றிரந்தபின்னும்பயற்றுகவே. (கூஉ)

வேறு.

உருத்திரமந்திரத்தினுலொருநூற்றெட்டாகுதிநன்குஞற்றித்தீமுன்
னிருத்தியமைந்தனையணியனினிதணிந்திட்டாகரவென்நீணடவார்த்து
வருத்தமிரிதருஞ்சுவத்திமங்கலவாசகத்தமைந்தன்சென்னி
திருத்தமுறுமறுக்கிசியிட்டதற்பினிடப்பாலிற்சிறுவனற்றாய் (கூ௩)

அச்சுதத்தோடான்மயத்தின்பிண்டமோரகவிடைவைத்தங்கையேந்த
வெச்செனுநீர்தண்ணெனுநீர்விராயன்னத்தொடுந்தாதைவிளங்குமைந்த
னுச்சிதெளித்தத்திரத்தானுவிதன்வாள்வாங்கியொரசீர்தருப்பைவார்வை
வைச்சுமயிரொரமேசானதிமனுவாலேந்துதிக்கின்மாட்டும். (கூ௪)

வினைபுரிந்துகுறைபட்டமயிர்தருப்பைவியனகலினேந்துமாழ்பு
தனிலிருத்தியையைந்துபங்கிலொருபங்கில்வளர்தலையிற்கேசம்
வனைகுடுமியெனவிடுத்துமற்றிடமெலாம்வபனம்வயங்கச்செய்வித்
தினியபுனலாட்டியலங்கரித்துவளர்தீயெதிரேயிருத்திப்பின்னர். (கூ௫)

ஆயிரத்தெட்டொருநூற்றெட்டாகசிவமந்திரத்தாகுதிகள்பேணி
மேயவுருத்திரமனுவாற்பூரணாகுதிசெய்துவிளம்புஞ்சுத்தி
பாயமறையொழிந்துபசுவாசிரியன்றனக்குதவியகலினுப்பி
யாயதருப்பையிற்பயிரிற்பவித்திரத்தியின்முலத்தைதான்றிற்பாற்றல். (கூ௬)

## வேறு.

பனிரெண்டாவது-ஆறுமுதல் உசு செய்யுள் - உபநயனம் - இவை பரசிவத்தைத் தரிசிப்பதற்குச் சமீபமாகிய நயனத்தை யுண்டாக்குங் கிரியை.

மரபுளிச்சவுளஞ்செசாற்றுமன்னுபநயனங்கேளாய்
கருவிலைக்காறும்மழுங்கரைந்தவெண்ணுண்டுமுன்னோர்க்
குரியனவற்றின்நேரேயோங்கியபிரமதேசு
விரிதருமாயுள்செல்வம்வேட்டவர்புரிகமன்றே. (கூ௭)

உறுபவத்தினுக்கெண்ணுண்டுமொன்பதுபத்துமாகும்
சிறுவியவருடந்தாமுநீங்கிரெட்டின்காறு
முறைமையாமதுவுந்தப்பின்முடிந்திடப்படாதமைந்தர்
மறுவுறுமடியாளீன்றமைந்தருமொருவராவர். (கூ௮)

மண்ணுடைவருதற்கிரைவருடமும்பத்தோடொன்றுந்
திண்ணியவரசர்நாய்கர்சிறுவர்சகாமமைதாந்தப்பி
னண்ணுநாலைந்தின்காறுநவின்றவையைந்தின்காறும்
பணணலாமவையுந்தப்பிற்பகர்ந்தமுன்னவரேயாவார். (கூகூ)

ஏத்துபநயனமுன்னரியம்பியசவுளஞ்செய்தல்
சூத்திரன்றனக்குத்தீக்கைசூழ்ந்துசெய்காலத்தென்னு
மாத்தநூல்பனத்திம்மார்க்குமறைந்தனவிரண்டுமன்றல்
காத்திடுங்காலத்தென்னுமிருவருங்கடுத்தவாற்றால். (க00)

அந்தணர்தமக்குவெள்ளியரசர்க்குவியாழப்புத்தேள்
புந்தியங்கடவுளாய்நற்கருத்தொடுபுணர்பின்னோர்க்குச்
சந்திரன்குபவராவர்தகுஞ்சிவத்துவிசன்மைந்தர்க்
குந்துபநயனமானவுடன்சிவதீக்கைசெய்தல். (க0க)

வெய்தருள்விளங்குந்தீக்கைவிரதமூவருக்குமுன்னர்
வைதிகசந்திசெய்தேயங்குறுசைவசந்தி
செய்திடல்முறையாகுஞ்சீர்த்தநயிட்டிகன்விரதியென்போர்க்
குய்திசெய்சைவசந்தியொன்றுசெய்திடலுமாகும். (க0௨)

அத்திரசந்திதீக்கையாளர்களபுரியாராயி
னத்திரஞ்சுமந்ததிண்டோளரசனேபதிதராவ
ரத்திரசந்திதீக்கையாளராற்றுதலேவேண்டு
மத்திரசந்திசெய்யுமடைவுமிங்கறையக்கேளாய். (க0௩)

அத்திரமனுவையுன்னியலையெறிபுனலினாடி
மெத்தியபிராணாயாமம்விதியுளியியற்றி நூற்றெட்
டுத்தமசிவாத்திரத்தைபுறக்கணித்திரதயத்தைப்
பத்தியினுரைத்துக்கொண்டேயாணியஞ்சலியராகி. (௧௦௪)

நின்றுழிநின்றேதன்னுண்ணின்றநின்மலனைமுக்கா
லொன்றுறவலமாவர்த்திட்டு*த்தாபநம்இனிதுசெய்த
நன்றியவினைகால்சேய்க்குமத்திரசந்தியாகும்
வென்றியிற்கிளருந்திண்டோள்விறலுடைவேந்தர்வேந்தே. (௧௦௫)

மொழிதருமறையோராகிமூவர்க்குமுறையேதேசு
பொழியிளவேனில்வெப்புப்புனன்முதிர்வேனில்கூதிர்
பழியறுகாலமாகும்பகர்ந்தமுன்னுளோநாண்மார்
கழிசிவத்துவிசன்மைந்தர்க்காதிரையுத்தமந்தான். (௧௦௬)

மறுவறுதிருவோணந்தான்வைகாநசனுக்குநன்று
மறையுமிந்திரநாண்மன்றவாஞ்சவுமணசனுக்குக்
குறைவில்வாருணநாளாகுங்குண்டகர்கோளகர்க்கு
நிறைதருசனனநாளுநிகழ்சிலவினைக்குக்கூடும். (௧௦௭)

அன்னசெய்வினைகள்யாவையென்றிடிலன்னமூட்டன்
மன்னியசவுளநீயனுவருமுபநயனம்வேறு
பன்னிடப்பட்டபட்டபந்தனநான்குமாகு
மூன்னுறுபக்கநன்றும்பின்னதுமுனியார்நல்லோர். (௧௦௮)

வேறு.

உத்தமஞ்சத்தமிதிரையோதசிதசமிசட்டிபுறுதுதிகைதிரிதிகைபஞ்சமியிவையோரேழு,மத்திமமேகாதசிதுவாதசியோரிரண்டும்வளர்ப்சகத்தாமதிநிதய்பக்கத்துக்கிரணச், கொத்துறுசந்திரபலனையிருப்பின் முதற்றிதியுங்கொண்டசதுர்த்தசியுமாங்கொழுந்திரையோதசிமுன். வைத்ததிதியொருமூன்றுமறவேனைத்திதியும் வகுத்தனர்களொருசாரார் மதிக்குடைமன்னவனே (௧௦௯)

விடைமிதுனகன்னிகடகந்தனுசுமீனமேவுமங்குராற்பணத்துக்கோரேழாநாளு, மடைவுறுமைந்தாநாளுமெனுமிவையுமாகுமறையுமுபநயனத்தோரைக்குறுப்புச்சிறந்த, தொடருமுபவீத † முட்டிநீடம் உத்தரீயஞ்சூழுமேகலைதெண்டமிவையவைகளாகும், படீசிவத்துவிசனுக்கேபகருமுட்டிநீடம்பன்னுமுத்தரீயமேகலையும்பின்னோர்க்காகா. (௧௧௦)

அவற்றுளுபவீதமுறையாற்கொணர்பஞ்சினைநூற்றங்குல நான்கிடைத்தொண்ணூற்றாறுசுற்றியதனை, டிவற்றினைழவேறிரணடிணக்கிப்புனனீற்றிற்கழுவியெழிற்சத்தியோசாதத்திடச்கரங்கீழாகச், கவர்றுவினைதீர்கிழக்குமேற்குமுகமாகக்கலந்திருவர்திரித்துவலக்கரங்கீழாலதனைத்.தவற்றகன்முப்புரியாக்கியிலைமலர்பைபர்தருப்பைபத்ம்முளொன்றிற் கிழக்கிருந்தோன்சார்ந்துமுன்னர்வைக்க. (௧௧௧)

---

* உத்தாபனம் - நின்றுதோத்திரஞ்செய்தல்.

† உட்டிநீடம் - தலைக்குத் தரித்துக்கொள்ளும் பட்டை.

பிரணவஞ்செங்கனன் மதியாதவன் வளியேபிதிரர்பிரமனரியரனிவ ரொன்றாதியொன்பான்காறும், விரவுமிழைதமக்குரியதேவிருடிகடாம் விளம்புமுறையேவசிட்டர்நாரதர்சாசிபரே, தூரிசிங்கவுசிகமுனியேயங்கிரா பாரத்துவாசமுனிபிருகுமுனிமரீசியகத்தியர்சிர். பரவுமிழையனைத்தினுக் கும்பிரமந்தசுதானபார்த்திபனேயீரிக்கயிற்றைவாமத்தாற்றெளித்து. ()

விலங்குறக்கைகளிற்பிடித்துத்தற்சனியங்குட்டம்விரவமுடித்திடுக்கா லைமூன்றுசுற்றிட்டவற்று. விலகுகலைமகள் சாவித்திரிகாயத்திரியையிரு த்தி ; அகோரத்திரத்தினிறுக்கலுபவீதங், துலங்குபுரிமூன்றிடத்துமயனரி யுமரனுந்தொக்கிருப்பர்பனவர்முதனூல்வருக்குமிடத்தோட், பலங்கதுவவ ணிமனுத்தாந்தற்புருடமகோரம்பகர்வாமமாகுமிவைபார்த்திடுமென்னவனே

சூத்திரர்க்குப் புரியொன்றே முப்புரியுமாகுஞ் சொற்றிடுமூவருணத் தும்பிரமசரிமுதலோர்க். கியாத்திடுமுப்புரிநூலொன்றிரண்டுமூன்றொரு நான்கெனவியம்புஞ்சுப்பிரபேதம்பிறநூல்வேறும், பாத்துரைக்குமுபவீத மாதிமடவியர்க்குப்பகராதுபின்னொருணயிட்டிகளையங்கலையு, நீத்தலுறுந்தீ க்கையுளாரெனக்காலு மணிவானிகழ்த்தருச்சனுதிகளின்மற்றையருமணி வார். (கக௪)

விழாவகத்திற்றீயகத்திற்புரோக்கணத்திற்செபத்தின்மேவுமுட்டிநீட மூழமேழாகுமெட்டும், வழாததனைக்கூற்றிலொன்றிலேழிலொன்றினகல மருவவினைழமெல்லியதாய்வாலியதாயிருப்பிற், றழாலுறுமற்றதனையிடச்செ வியிலொருதானைச்சார்ந்துதொங்கசசுற்றிவலச்செவியிலொருதானை, ஈழா துசெருகுதலுத்தரீயமுந்நூலொப்பநல்லகலையிருதானைகளுக்கும்வகையணி தல். (ககரு)

முஞ்சியெனும்புன்மூன்றுபுரியினுறுகயிறுமூரிநெடுஞ்சிலைநாணுஞ்ச ணைக்கயிறுமூவர்க். கெஞ்சலுறுமேகலைமுசசுற்றுறமற்றிடைமேலிணக்குமு தாமான்றோலு மயல்பியல்பான்மரித்த, வஞ்சவியன்மயிருறுதோலங்குல மூன்றிரண்டொன்றகலமுறவிருதலையுமுபவீதநதிணைக்கி, விஞ்சலுறுஞ்ச த்தியோசாதமுறைத்தணிதல்விதித்தமுஞ்சிகிடையாதேற்றருப்பையும் வே தியர்க்காம். (ககசு)

தண்டமொருநால்வர்க்கும்பலாசுகருங காலிதகுமத்திமூங்கிலிவைதா முறையேநெற்றி, துண்டமெறுழ்த்தோளுமியளவுயரமாகுந்தோலுரியாதழ கினவாய்க்கோணுமைவேண்டுங்.கொண்டவுபவீதமுதலானவெலாமுறைத் தாங்கொற்றவனேயினிச்சவுளம்போல்வபநமுடித்து, மண்டறலிற்படிந்து சருநுகர்ந்தசிறுவனைத்தான் வன்னியின்றென்புறத்து வடமுகமாக விரு த்தி. (ககஎ)

அங்கியினுத்தரத்திலுபவீதமுதலிருத்தியான்றசுசிமந்திரத்தாலறலினூ ற்றெளித்துத், தங்குசிறுவனைப்பஞ்சப்பிரமத்தாற்றெளித்துத்தயங்கரிசியா திகளாலருச்சித்துநீராற், பொங்கழலைவியாகிருதிமந்திரத்தால்வளைத்துப் புகரறுச்ங்கிதையின்வெவ்வேறைத்தோமம்புரிந்து, பங்கமறுவுபவீதமாதிக ளைச்சிறுவன்பகர்தருமந்திரங்களினூற்பரிக்கும்வகைபுரிதல். (ககஅ)

---

அகோராத்திரம் - அகோரமந்திரம் -அத்திரமந்திரம்.

ஒக்கவுபமந்திரமந்திரமிரண்டுங்கலைக்காமுரையைந்திருக்குமனுமேக
லைக்கத்திரந்தீன், றக்கநெடுந்தண்டினுக்குமுப்புரிநூறனக்குச்சாற்றுமது
வேயுத்தரீயத்துக்காகுந், தொக்கனைத்து மணிந்தவன்பின்காலலம்பிமுக்
காற்றோயமுழுந்தளவுநுகர்ந்தங்கிவலஞ்செய்து, மிக்குவளர்பிரமகூர்ச்சத்
தின்முன்றபுரிந்தவிளங்கியவர்னைந்துநுகீர்ந்தாசமநம்புரிக. (கககூ)

பிரமாங்கமந்திரத்தாற் * சம்பாதவோமம்பேணுகுரவன்பிரமவுபதே
சஞ்செய்துபுரைதீரமனுநூற்றெட்டெண்ணலெரிவலமாய்ப்போந்திறைஞ்
சீல்செய்விக்குச்சிவாத்திரத்தாகுதிநூறொருவாதுபுரிந்தீசானுதியொன்பா
ன்மனுவாலொன்பதிற்றுசமிதையினேமம்புரிவித்தறலா.லெரிகாயத்திரியி
ன்வியாகிருதியின்வட்டிப்பித்தேழோமந்தனித்தனிசெய்வித்தல்பிரமாங்க
ம். (கஉ0)

தேவதேவனைவணங்கியாசிரியன்பூசைசெய்தவர்க்குத்தனக்கியன்ற
செழும்பொருள்களுறுத்தி, மேவுகாஞ்சனமாதியாலியல்பாத்திரத்தைவிய
ன்புருடமந்திரத்தால்வாங்கிவலக்கரத்திற். பாவுநீடண்ட டக்கரத்தேந்தி
யன்னைபயந்தவளோடுடன்பிறந்தாடன்னொடுடன்பிறந்த, பூவைமாரிவரு
ளொருவரையடுத்து பிச்சைபுகரின் மொழிமொழிந்தேற்றன் மூவருக்குமு
ரித்தே. (கஉக)

பவதிமொழிமுன்மொழிதல்பிராமணனுக்குரித்தாம்பார்த்திபனுக்கி
டைமொழிதல்வணிகனுக்குப்பின்னுந், தவறற்றுமுத்தினமிவ்வாறிரந்திரண்
டுபோதுந்தழலோம்பிச்சமிதையினுநெய்யினுமாகுதிசெய், தவமறநாலாநா
ளிற்பலாசவோமஞ்செய்தகற்றியுபவீதமுதல்வேறணிதன்முறையா. மிவறு
சத்தியோசாதத் தானூற்றெட்டோம மியற்றிமொழியாமைமுதலாம்விரத
மொழிக்க. (கஉஉ)

விளங்கழலைமுன்போலப்புனலினல்வளைத்துவியோமவியாபியினூறு
ங்காண்டரிடியோமங்களங்கமறவொருநூறுங்காதலொடுபுரிதல்காண்டோ
பக்கிரமணந்தான்பிரமசரியத்துள், வளங்குலவுநயிட்டிகத்தைவேட்டவன்
றன்குருவைவணங்கியிரந்தது லைக்கச்சதவோமம்புரிந்திட், டுளங்குளிரப்
பூரணாகுதியுமுறையியற்றியொளியழனித்தலும்வளர்த்தலுரித்தவர்க்குமன்
றே. (கஉந)

வேறு

மேதகுநயிட்டிகவிரதமேற்குமுன்,னேதுபவீதயாதிகளையொண்ணதி, போ
தமிழ்தடாகமாதிகளிற்போக்குபு, கோதறவேறவையணிதல்கொள்கையே

அருள்வளர்சிவனையுமங்கிதன்னையுங், குருவையும்பூசைமுன்குறித்
துச்செய்தலான், மருவுமப்பூசனைமூன்றும்வைகலு, மொருவுவதிலையுபநய
நத்தார்க்கெலாம். (கஉ௫)

பயிலுபநயநமுன்பண்ணவர்க்கிய, லியன்மனுத்தழலினையிங்குவேலினுய்
மயரறுஞ்சயாதியோமத்தையாக்கியங், கயர்வறவொடுக்குதலறமதாகுமே.

வேறு.

சத்தியோசாதமிருக்குநல்வாமந்தயங்கியவெசுர்மயமகோர
மெத்தியசாமமறைவியன்புருடம்விழுத்தகுமதர்வணமயமாஞ்
சுத்தீவிசானஞ்சகலதேவர்களின்சொரூபமாமங்கமந்திரங்கள்
வைத்தவேதாங்கமாறுமாந்தெளிகமன்னவவகுத்தவீம்மனுவை. (கஉஎ)

---

* சம்பாதவோமம் - மிகுதியாக நெய்யைப் பெய்யுமோமம்.

உரைத்தலேவேதமுழுவதுமோதலுரைப்பித்தலோதுவித்திடுதல்
புரைத்தபுசிவபூசனைசெயல்வேட்டல்பூசைசெய்வித்தல்வேட்பித்த
னிரைத்ததன்பொருளைத்தக்கவர்க்களித்தனெறியுளியீதலன்னவர்பாற்
றரைத்தலைவாங்கலேற்றலறுமிவைதாந்தகுசிவத்துவிசன்பான்மிகவும். ()

மேதகுசிவத்துவிசனிவையுரைத்தவிதிப்படியன்றிவேறாக
வோதியபனுவல்விதியுளிக்கிரியையுஞற்றுறின்மறுவலுந்தீக்கை
யாதியிற்புனிதனுவனுத்தமமாவறைதருகாலங்கள்கழியிற்
றீதறவுத்தாலகவிரதத்தைச்செய்துபாயனம்பின்புரிக. (கஉகூ)

இதன்மேல் கஉங-வது செய்யுள் முதல் கங()-வது செய்யுள் வரையினும், பதின்மூன்றாவது காண்டோபக்கிரமணமாகிய வேத பாகங்களைய த்தியயனம்பண்ண ஆரம்பிக்கும்கிரியையும்-(பதினுன்காவது) காண்டமோசனமாகிய அத்தியயனத்தைவிடசெய்யுங்கிரியை யுங்கண்டுகொள்க.

உத்தராயணத்திற்சித்திரையொழிந்தங்குறுமகமாதியமதியின்
மெத்துமூடத்தில்வெள்ளிபொன்னுருதவேலையினுறுத்தநன்னுளி
னத்தமாவாசையிருத்தைதீர்திதியினனுகுமேழாமிடமன்றச்
சுத்தியாயிருப்பவதுவைசெய்வதன்முன்றொடங்குகசமாவருத்தநமே. ()

பதினைந்தாவது-இதுமுதல் (ரு) செய்யுள் சமாவர்த்தநம்-இவை பிரமசரிய விரதத்தையொழித்தற்குச் செய்யுங்கிரியை.

காப்பணிந்ததற்பின்கனைந்தசுக்கிரியவிரதத்தைக்கரிசறத்தொடங்கி
வாய்ப்புறுமூலத்தாகுதிநூறுவயக்குபுமூந்தியவிரத
யாப்பினையகற்றியில்லினுச்சிரமயாப்பினையுற்றுவார்சிகையும்
கூர்ப்பரமயிருந்தவிரவேவபநவகுயிற்றிடப்பட்டுநீராடல். (கங்க).

விஞ்சுமீசானமாதியினூறுவியத்தகுமாகுதிபுரிந்து
முஞ்சியாதிகள்விட்டிரணடுமுப்புரிநூன்மொய்ம்புறவுறீஇமதுப்பருக்கந்
தஞ்சமார்வாமமந்திரத்தருந்தித்தழல்வலஞ்செய்தெதிர்வணங்கிச்
செஞ்செவேநீண்டதண்டமுங்குடையுந்திகழ்ந்தபுத்தகமுங்கையேந்தி. ()

மொழிதரும்‡உபாநபதத்தொடுவடக்குமுகமுறச்சென்றுபெண்கொடுப்
கழிமகிழ்வொடுநின்றினியனகிளப்பக்காமரில்லினையடுத்திருந்து [போன்
பழியறுமாசீர்வாதமுற்றியபின்பலரொடுமுண்பதுவிதியா
மிழிவறுமிதனேடரசருக்குரியவியல்பும்வேறுளததுகேளாய். (கஙரு)

இதனுள் இதுமுதல(உ) செய்யுள் அரசர்க்குரிய சமாவர்த்தநம்.

கலிங்கமோரிரண்டுதரிக்குமுன்னரசன்கதிருமிழ்படைகரந்தரித்துத்
துலங்குசூரியனைத்துற்கையைவணங்கல்சூத்திரனிருகலையகற்றி
யிலங்கமூன்றணிதலியம்புமன்னவனேயியல்சமாவருத்தநத்தயில்கைத்
தலம்படுபொழுதின்மன்றலிற்றத்தந்தைவிகவர்தீனபுரிக. (கஙச)

சாற்றுவந்தனைதான்தரும்புகிஞ்சிகம்பைந்தருப்பையென்றிவையொருங்
வீற்றுறவொன்றேயாகமுன்னவனேவிழைவொடுகொண்டுபோய் [காக
ளேற்றியீதனதுநடுமனையகத்தேயிருத்திநற்பூசனைபுரிதல் [வளுங்க
கோற்றொடியவர்க்குவதுவைநிச்சயமேகூறியசமாவருத்தநமாம். (கஙரு)

---

‡ உபாநபதம் - பாதரட்சையணிந்தகால்.

பதினூருவது - இதமுதல் (உகு) செய்யுள் - விவாக விதி.

வரிந்தசாதகத்தான் மன்றலுக்குரியமாதராடவர்களாயுளினைத்
தெரிந்துபின் மடவாரிடப்புறத்தியல்புஞ்செப்புமாடவர்வலப்புறத்தின்
விரிந்தநல்லியல்புமிருக்குமாரோக்கிவிரிசியுஞ்சகுநமும்பார்த்துப் [ரும்.
பொருந்துறின்வதுவைபுரிவதுவழக்காம்பொருந்துறுதெனில்வழக்கன்

ஒருவயிற்றுதித்தோரிருவருக்கிதுமற்றுடன்குறப்புரிதலோராண்டின்
மருவுறப்புரிநல்வழக்கிலேசவுளமன்னுபநயந்தமதுவே
யொருகுலமொருகோத்திரமெனிலாகாதுற்றதாய்தந்தையர்தமக்கு
வருமுறையைந்தினல்லதுடன்ஞமற்றையமுறையினுங்கூடா (கஙஎ)

குலங்களோரிரண்டுந்தூரமில்லனவாய்க்குழூம்யதலேமுறையினாந்
தலங்கலில்லாததூய்மையவாயினத்தகுகுலத்திடைப்பிறந்த
கலங்கதிரெறிக்குமாதராண்மைந்தன்கதுவியவாயுளிற்றூழ்ந்து
புலங்கொளும்பனுவல்கிளர்ந்தபேரழகுபுணர்ந்திடின்வரைவினுக்குரியள்.()

காலிருவயதுகண்ணினுள்கவுரிநவையறுமொன்பதாம்பிராய
மேலுறவுடையாளுரோகணிபத்தென்றியம்பியவாயுளாள்கன்னி
மேலுறுமீராருண்டினையுடையாள்விடளியென்றுரைத்திடப்படுவார்
மாலறுமிவருட்கவுரியைத்தானம்வழங்கினேன்சுவர்க்கம்வாழ்ந்திருப்பன்

உரோகணிதானம்பண்ணினேன் திருமாலுறைந்துவாழுலகில் வாழ்ந்திருப்பன்,பராவுகன்னிகையைவழங்கினேன்பிரமன்பதத்தில்வாழ்ந்திருப்பன்பன்னிரண்டு, பிராயமுற்றவளைவழங்கினேனிரவுரவமெனும்பெருநரகுழப்பன்,னிராறின்மேம்பட்டமாதனைக்கொடுப்போற்கிதுபயனென்றியானறியேன். (கசo)

பூத்தவள்வதுவைமுற்றுறுதிருட்பிற்பூப்பவுங்கொடாதுவைத்தவளைக்
காத்திருப்பவனிரியக்கமும்பிதிரர்சைக்கொண்டுநகர்தலினந்தோ
மூத்துறுகுலமுமழியுமாதலினுன்மொய்த்தபூப்பினுக்குரித்தாக
யாததவாயுளின்முன்ஞயுளுங்கதியுமீட்டுவோர்மன்றல்செய்தளிக்க.(கசக)

பொருள்விழைந்தணங்கைக்கொடுத்தவன்றனக்கும்புகன்றமுற்குற்றமே யடுக்கும், பொருள்விழைந்தளித்தபூவையுந்தூய்மைபுணர்கிலள்புழுக்கையேயொப்பா, டருமுறையின்றிவலியினுற்கவர்ந்தவையலுங்கருவிலேயாதி கருமமில்லவளும்விதியுளிவதுவைசாணினுமத்தகைமையரோ. (கசஉ)

பிரமமேபிரசாபத்தியந்தெய்வம்பேணுமாரிடம்வளரசுரம்
பரவுகாந்தருவமிராக்கதம்பசாசமெனப்பகர்மன்றலோரெட்டாங்
கரவுதீர்பிரமசரியநோற்றவர்க்குக்காமருசெல்வமிக்குடைய
வரவமேகலையைக்கிமுன்றுனமாகநன்றளிப்பதுபிரமம். (கசங)

அரிவையைக்கோடற்குரியவன்கொடுத்தவாடகத்திரட்டியம்மகளைப்
பரிவொடுசார்த்திக்கொடுப்பதுபிரசாபத்தியம்வேள்விசெய்தவர்க்கான்
குரிமையின்மகளைத்தக்கிணையாகவுதவுதறெய்வமீராவைப்
புரியிழையணிந்துவிதிஇயிடைமகளைப்புரையிலார்க்களிப்பதாரிடமே. ()

மகட்பயந்தவனையிரந்திரந்தீந்துவாங்கலுமொக்கலார்க்கிரும்பொன்
மிகக்கொடுத்தவராற்பயந்தவனளிப்பமேவலும்பிறவுமாமசுரந்
தகப்பெருங்காதலாலெதிர்நோக்கித்தங்களுட்கூடல்காந்தருவம்
பகப்பயந்தவனையலைத்தணங்கலறப்பாழியிற்கொளலிராக்கதமே. (கசரு)

களித்தவர் தயின்றோர்மூத்தவரிவளைக்கரவினூற்கவர் வதுபதூசந்
தெளித்தன மன்றலெட்டெமந்தணர்க்கேசிறந்தனமுந்தியான்கு
மளித்தணங்கேற்குமசுரராழ்வருக்குமாகுஞ்சூத்திரன்முதலோர்க்கு
வளைத்தகந்தருவமிராக்கதமுரியமநுவுறுதொகுவர்க்கும்பசாசம். (கசசு)

இச்செய்யுளில் ஒவ்வொரு வருணத்தார்க்கும் மணவரையின்
பேதங்களை முறையே கண்டுகொள்க.

இன்னவாறுரைக்குஞ்சுப்பிரபேதமிவற்றினைச்சிறிதும்வேற்றுமையாற்
சொன்ன நூல்வேறுமுளததுசிற்கதொடங்கிடவதுவைவேதிகளைப்
பண்ணுதுமிருபத்தொருமுழவேதிபனவருக்கரசர்க்குப்பதினெந் [ம். ()
தின்னலில்வணிகர்க்கொன்பதுபின்னோர்க்கெழுமுழஞ்சிறப்பருக்கைந்தா

மருவியவந்தராளர்க்குநான்காமங்கலமனைத்துமைந்தளிக்கும்
பெருகிடமிலையேற்பிராமணன்முதலாநால்வர்க்கும்பிறங்குவேதிகைதாம்
வருமுழமேழாறைந்துநான்காகுமற்றிவைதமக்குநேராதே
விருமுழத்திரட்டிவேதிகையெல்லார்தமக்குமாம்சிறப்புமேவந்தே. (கசஅ)

இவ்விரண்டு செய்யுளில் மங்கலக் கூறையும், திருமங்கிலிய
விபரமுங்கண்டுகொள்க.

மந்திரவாசமேழிருமுழமாமற்றதற்கெட்டிலொன்றகலஞ்
சுந்தரவெண்பட்டுரித்திழைகறுப்புத்துன்னுறுசித்திரபடமுஞ்
செந்துவர்ப்பருத்திக்கலிங்கமும்விலக்கார்திகழுமங்கிலியமாக்கும்பொன்
முந்திருகுஞ்சமுதற்பதினாறுமுடிவுமுப்பதுமுடிவினுமாம். (கசகூ)

இலகொருமருப்பனையமலர்க்கமலமெனவெழிற்சிவலிங்கமெனச்செய்
தலரொளியரும்பைந்திழைக்குறுதுணைபாலாக்கிமற்றதனிடையிரண்டு
குலவியகனதக்கயிறுகோத்ததுதான்கோதின்மங்கிலியமாங்கண்டாய்
மலர்தலையுலகம்வியத்தகுமன்றல்வரவினைப்புகலுதுங்கேளாய். (கரு௦)

குருமணிக்கலனுமாலைபுந்துகிலுங்கொண்டெழில்கொளவலங்கரித்திட்
டிருவர்களுடையகோத்திரநாமமியம்பிநீரோடுதன்மகளைப்
பெருவளம்பிறங்கவின்றவனளிக்கபெற்றவனில்லையேன்மகளைத்
தருமவனுடனேபிறந்தயன்முதலோர்தம்முளேயொருவனீந்திடுக. (கருக)

அங்கிமேற்றிசையினுதனமியற்றியாங்கொளிர்சிவாகமமனுவாற்
பொங்கெழிற்கலைமென்மலரிவைகொடுத்துப்பொற்புறவிடப்புறமாகத்
தங்குவித்ததன்பினபவிரதியத்தாற்றையலாளிரதயந்தொட்டு
மங்கலத்திருநாண்மங்கலமுழங்கமணமகன்மனைகளத்தணிக. (கருஉ)

சத்தியுஞ்சிவமுமெனநினைந்தாசான்றகும்பிரணவந்தொடர்மூலம்
பத்துறழ்பத்தாகுதிபுரிந்தினிமைபயின்மதுப்பருக்கநன்களித்துப்
பொத்தியமணித்திண்கடத்துறமணலும்பூதகாயத்திரிமனுவால்
வைத்தெதிர்காட்டிவயங்குமாசமநீம்வாங்குவித்ததன்பின்றையசன்றான். ()

அறைவியராகிருதிமனுவினூற்றெட்டாகுதிபுரிந்தங்கியிற்மேரன்பா
னிறைபிராணாதியோமமுநிகழ்த்திநிகழ்கருத்தேனுமந்திரத்தாற்
கறையறுபசுவுங்கன்றுநேரடுப்பக்கண்டழறனக்குமென்முகத்தின்
மறையுளியரனைப்பூசனையியற்றிமாதுதன்வலப்பதம்பிடித்து. (கருச)

எரியழல்வடபால்வாமதேவத்தினொழுடியியக்கியம்மியின்மே
லுறைசிவகிரீயத்திரியிஞலெடுத்திட்டொண்டொடிவலக்கரம்பற்றிப்
போரியுமாமகேசத்தஞ்சலியோமம்புரிதரச்செய்துவல்வினையை
வரைதரும்வியோமவியாபிமூந்திரத்தான்மனையழலாகுதிவளர்த்து. (கருரு)

மறுவறுமோமம்வியாகிருதியினும்வயங்கியசித்தியஞ்சிறப்பென்
றறைவனபிரமாங்கங்களிஞலுமாற்றியெவ்வங்கமந்திரத்துங்
குறைவறவோமங்குயின்றமுன்போலக்கோற்றொடிகரப்பிடித்தேகி
நிறைசுவைப்பாலிற்கால்கழீஇயணிகணிரப்பியமனையகம்புகுந்து (கருசு)

சத்தியோசாதத்தான்மனைபுனிதந்தழைதரச்செய்துமங்கிலிய
முத்தநேர்நகையார்நால்வர்களிட்டமூரியம்பரயணையிடையே
சத்தியேயாகமினைந்தொருகல்லைத்தங்குவித்தொருவர்மேலொருவ
ரத்தமாடாமலுறையிறந்தலரியம்புலிகினைந்துறங்குகவே. (கருஎ)

வைகறையெழுந்துநாட்கடன்முடித்துவைகலுமாமழோப்பிப்
பொய்கழியோமநான்கெனுந்தினத்தும்புகல்பிரமாங்கமந்திரத்தாற்
செய்தருந்துதியைக்காட்டுபுசயாதிதிகழ்வியாகிருதியாதிகளின்
வெய்துறுகழுவாயோமமும்யற்றிவியன்மனைமுன்புபோற்புகுந்து. (கருஅ)

இயம்பியவாமத்திருதுசங்கமனமியற்றியைந்தினத்துறுகாலை
நயம்படவபுநாணணியூர்க்கிழக்குநடந்துதும்பமரநோக்கி
வயம்படுமுழுங்காலளவுநீரிறங்கிவத்திரத்தாற்சயல்பிடித்துப்
பூயம்படுமத்திமூலத்தற்பூசைபண்ணுகபார்த்திபரோறே. (கருகூ)

பத்தினில்விசுவதேவரிதாயவெனுமனுப்பகர்ந்தொருபதினைந்
தொத்தவாகுதிசெய்தொளிர்மனையகத்தேயுறுதசநிக்கிஞம்பூசை
பத்தியிற்புரிந்திட்டெச்சமோரைந்தும்பயிற்றியிட்† டப்பியாகதரோ
டுத்தமவதிதிபூசையும்புரிதலுறுமுறையாகுமென்றுரைத்தான். (௬0)

அரசன் ஆசிரியற்கு விடைகொடுத்தல்.

இன்னவாறிருங்கிரியையீரெட்டுமினிதியம்பு
நன்னராரியன்பாதநளினமலர்பணிந்தேத்தித்
துன்னிநீள்பொருள்பலவுந்தொகுத்தவனையவனிருக்கை
மன்னிவாழ்தரவிடுத்துமனுநீதிவளர்சோழன். (௬௧)

அரசன் - கமலவதியென்னு மனையாளிடம் இன்ப நுகர்தல்.

மனைக்குரியாண்முகநோக்கிவயங்கியபூப்புறுநாளி
னினக்குரியவொழுக்கமிவைநிகழ்த்துதிநீயெனவியம்பி
யினிக்கவிதித்திடுநாளிலிணைவிழைச்சாற்றலுமறுகி
லுனிக்கணுறுபனியேபோனுண்கருவாய்ந்ததுவயிற்றில். (௬௨)

இதுமுதல் அ - செய்யுள் கருப்பக்குறி.

கருவாய்ந்துவயிற்றகத்துக்கதித்துவளர்செயன்மனையா
ளுருவாய்ந்தகுறிகளிஞலுணர்ந்துடனேகாப்பணிந்து
பெருகார்வத்தொடுமங்குராற்பணமும்பெரிதாற்றித்
தருமாணுமிறைகருப்பாதாகவினைதகச்செய்தான். (௬௩)

---

† அப்பியாகதர் - வந்தவர்கள்.

இருமதியிற்புஞ்சுவகையியற்றியிருமூன்றென்ன
வருமதியிற்சீமந்தம்வகுத்திட்டான்மனுவேந்த
னொருமதித்தண்கலையென்னவுறுகருப்பம்வளர்தோறுங்
குருமதியினொளிர்முகத்துக்கோற்றொடிவேறுருவானாள். (௧௬௪)

சுவையாதுநுகர்ந்திடினுந்தொகவேற்றிட்டுறுப்பனைத்து
மவர்சாரம்புகுவிக்குமெழில்வயிறுகருவேற்றுத்
தவநாளூர்தன்னுருவம்வேறாகித்தக்கவளை
யவநாளும்வேறாகியலங்கும்வகைபுரிந்ததே. (௧௬௫)

கொண்டல்படிந்திடுஞ்செம்பொற்குவடெனவுமலர்பதத்து
வண்டுபடிந்திடுங்கனகவனசமுகிழ்த்துணையெனவுங்
கண்டவர்கள்வியப்பெய்தக்கடையவொருதலையாக்கு
மண்டியபொற்செப்பெனவும்வளர்முலைகள்கறுத்தனவே. (௧௬௬)

மாரவேண்முதற்கணையாய்வயங்குமுலைகறுத்தலொடும்
வீரமார்கடைக்கணையாய்விளங்கும்விழிமலர்நோக்கிக
கோரமாயெதிர்ந்தவரைக்குமைக்குமருந்திறஞ்சிறிது
தீரவேபுள்வாங்கிச்சிறந்தசிறம்பசந்தனவே. (௧௬௭)

கண்ணீலமெனுமனையாள்காமர்சிறப்பசத்தலொடு
நண்ணீர்மைநுதலென்னுநகைமதியுஞ்சிறம்பசந்த
கண்ணீர்மைக்கணவனருந்தாவமிழ்துள்ளேமிகுந்து
வெண்ணீர்மைபோர்த்ததெனவிளர்த்ததுசெவ்வாயதரம். (௧௬௮)

தன்னுருவந்தோற்றுமற்றறுகண்மையொடுந்தாக்கும்
பொன்னுருவமுலைகறுத்துப்பொலிவழிதலெதிர்நோக்கி
மன்னுவன்கைதலைக்கொள்ளவயங்குருவீங்கியதேய்ப்ப
மின்னுருவிடைவிழிக்குப்புலனாகவிளங்கியதே.

அருங்கலம்புத்திரனன்றியரிவையர்க்குப்பொன்னாதி
யிருங்கலமற்றருங்கலமாயிராதுமிகையென்பாள்போற்
பெருங்கலன்கள்பொறையாற்றாப்பெற்றியினாற்பேரணியு
மொருங்கலர்மாலையுமுவப்பினணியாததளர்வினளே. (௧௭௦)

கருப்பமுடையோர் விரும்புமுணவுகள்.

கருவிடத்துநீறிடுதெல்கட்டினென்றுதிருநீறும்
பொருதடந்தோண்மகன்பழகப்புகையுண்டகருமண்ணுந்
தெருளுயிரக்கருவினிடைச்சிவனுநிலையிதுபோலென்
றருவகறுந்தீம்புளியுமுவந்தருந்தும்வயாநிறைந்த. (௧௭௧)

புத்திரோற்பத்திக்குக் காலங்குறித்தல்.

ஐயிருநன்மதியடுப்பவகைவிளைந்துகமலவதி
மெய்யினையக்கருமதலைமிளிர்ந்துசிரங்கீழ்நோக்க
வையெனச்சென்றரசனிடையுழையருணர்த்தலுங்கணிகள்
வையவிதுபொழுதகவிற்புரத்திடினேநன்றென்றார். (௧௭௨)

நன்முகூர்த்தம்வருமளவுநனிமைந்தன்பிறவாமை
யென்முயன்றுமெனவரசனிளைஙின்றசெயல்கேளா
வன்மதியிற்கமலவதிமற்றென்னைத்தலைகீழா
வென்மணிநூபுரத்தாளின்யாத்தினித்தூக்குகவென்றாள். (கஎங)

புதல்வன் பிறந்தமை.

ஈங்கிதுவுந்திருவருளாலியன்றதெனவலித்தரச
னோங்குதுவேபுரிமினெனவியலிருந்தாரதுபுரிந்து
தீங்குறுகாலங்கடந்தசெவ்வியினிலிறக்கிறு
ரோங்குவலம்புரிமுத்திஞெருமைந்தனுதித்திட்டான். (கஎச)

கமலவதி குழந்தைக்கு கோச்செங்கண்ணனென்றமை.

தக்கபவமுறுங்காலந்தாழ்த்தலினுற்றனிமைந்தன்
செக்கர்விறவிழியனுய்த்திகழ்ந்தொளிருஞ்செயனோக்கி
மைக்கணுறுகமலவதிவளர்சோச்செங்கண்ணனே
தொக்கவறந்தலையெடுப்பத்தோன்றியவிம்மணியென்றாள். (கஎரு)

இதுமுதல் (ச) செய்புள் அரசன ஆலயங்களுக்கும் வேறு குடிகளுக்குஞ் சிறப்புச் செய்தமை.

வேறு.

உறைந்தசேர்ழநாடேயன்றியுலகெலாம்வியப்ப
விறந்ததேவரும்பிரருங்விழுத்தகளிப்ப
மறந்தவாதகெம்மன்னருமனங்களிகூர்ப்பச்
சிறந்தகான்முளைபிறத்தலுந்திகழ்சுபதேவன். (கஎசு)

அறங்களாக்குகவாலயந்தொறுஞ்சிறப்பெடுக்க
விறங்குமாநகர்த்தெய்வமாதிகளும்பேணிடுக
மறங்குலாவுமெம்மன்னர்காளிகளம்வாய்விடுக்க
வுறங்குவாருளரோவவர்க்குறுமகிழுறுக்க. (கஎஎ)

திறைகொடாதுசில்லாண்டுநெம்மன்னரோசிறக்க
கறைகொடாதுசில்லாண்டுவாழ்குடிகளேகளிக்க
குறைகொடாதமாநகரெலாங்கோடனேகிளக்க
மறைகொடாதுபண்டாரம்வாய்திறக்கவென்றேவி. (கஎஅ)

தூயநீர்படிந்தடுத்தனன்றேன்றலைநோக்கி
மேயசாதகன்மத்தினைவிதியுளியற்றி
யாயகாஞ்சனமாதிசடானமாவளித்துப்
பாயவோமமும்பத்துநாளளவுமாற்றினனால். (கஎகூ)

வந்தவர்கட்கு மகிழ்ச்சிசெய்தமை.

செய்யகோலுடைமன்னவர்கையுறைசெறுத்திட்
டையுவோகையின்விஞெமிருர்க்கதிமகிழ்சிறப்ப
வெய்யவேலினன்விழுக்கலன்பூந்துகில்பிறவும்
பெய்யுமாரிபோல்வழங்கினன்பெரும்புகழ்நிறுத்தான். (கஅo)

கர்னவேதனம், நாமகரணஞ்செய்தமை.

வளருத்தாபநம்வயக்கிவார்காதினைத்துளைத்துத்
தெளிபுமாமதிமனைவிகோச்செங்கணானென்றெய்வன்
றளவிலோகையினறைந்தமைந்தாயமேமகற்கு
வெளிறில்சேள்வியான்விதியுளியட்டவெழுத்தனாறுல். (கஅக)

புதல்வர் வளர்கின்றமை.

கொங்குயிர்த்ததார்ச்சொற்றவன்குறித்தநாமனேனை
மங்கலத்தபல்விணைகளுமரபுளியியற்ற
வங்கண்மெல்லியலணங்கினாற்றவவாற்றத்
தங்குமைந்தருந்தனிமதியெனவளர்கின்றார். (கஅஉ)

இதுமுதல் கூ செய்யுட்களால் ஆணபாற் பிள்ளைப்பிரபந்தத்தின் அங்கங்கள் அறிந்துகொள்க. க-வது செங்கீரை ஐந்தாமாதம் இவை ஒருகாலைமடக்கி ஒருகாலைநீட்டி யிருகைகளையும் நிலத்திலூன்றித்தலை நிமிர்ந்து முகமசைய ஆடுதல்.

இவ்வுலகோர்பொருட்குமிடமென்றுகாட்டுதல்போ
லெவ்வமறுநிலத்திருகையிருத்திநெடியான்போசங்
துய்வுதல்யான்விழைந்திலேனெனத்தலையைத்துளக்குதல்போற்
செவ்விபெறுமுகநிமிர்த்துச்செங்கீரையாடினார். (கஅங)

உ-வது தாலம் எழாமாதம்.

மாயையெனும்பெருந்தொட்டில்வல்விணையின்கயிறியக்கிப்
பாயபெரும்புவனமெனும்பாப்பணைததுஞ்சென்றுட
லாயவொருதாலொழியவடுத்தவரைமணித்தொட்டி
லேயும்வகைகயிலையைவிட்டிட்டேமையர்தாலாட்டினார்

ங-வது சப்பாணி ஒன்பதாமாதம்.

எஞ்ஞானமில்லாமலிதுசாறுநிலைகாணு
வஞ்ஞானப்பெருங்கடலிலலைப்புண்டதுயர்தீர்க்கு
மெய்ஞ்ஞானவரவறிந்துமகிழ்கின்விணைவேபோற்
றஞ்ஞானம்பெறவந்தார்சப்பாணிகொட்டினார். (கஅரு)

ச-வது முத்தப் பத்தாமாதம்.

இரவிமருமானென்னுமியல்பெவர்க்குந்தெரிப்பவர்போ
லரவமணிமேகலையினணங்கனையார்முகமென்னும்
புரியிதழ்த்தாமரைமலர்கள்பொற்பவலர்தரச்சென்று
முரிவிலருள்பெறவந்தார்முத்தமளித்தருளினார். (கஅசா)

ரு-வது வருகை பனிரெண்டாமாதம்.

கானனையன்கற்பகப்பூங்கண்ணியருமிருடியரும்
பானனையுமணிச்சிறுவாய்ப்பாலன்வருகெனவிளியாத்
தானனையபெருந்தவத்தாற்சார்ந்தபெரியவர்தம்மை
மானனையவிழியடவார்வருகவருகெனவிளித்தார், (கஅஎ)

௬-வது அம்புலி பதினொருமாதம்.

சந்திரனீசூரியனிற்றனிமைந்தன்பயிர்வளர்க்கு
மந்தரனீயெவ்வுயிருமளிக்குமிவன்றூரணியான்
சுந்தரமாரிவனுடனேமதாக்காடவருகவெனப்
பைந்தொடியார்மதிவிளிப்பப்பார்த்துமனங்களிகூர்ந்தார். (கஅஅ)

எ-வது சிற்றில் இரண்டாம் வருஷம்.

உற்றதோர்வினையன்றியுறுததுசெய்தாலதனைப்
பற்றலாரெனவழித்துப்பாரளித்தறெளிப்பவர்போன்
முற்றிலான்மணற்கொழித்துமொய்த்தசிறுமியரிழைத்த
சிற்றிலானவையவர்கள்சினந்தலறச்சிதைத்திட்டார். (கஅகூ)

அ-வது சிறுபறை மூன்றாம்வருஷம்.

பிறவியெனுநெடும்பகையும்பெருகுகலியின்பகையு
மறமலிமன்னவர்பகையும்வையகத்தோர்தீவினையு
மறவொழிகவறமனைத்துமமர்கவெனச்சாற்றுதல்போற்
சிறுவிரல்களொளிதுளும்பச்சிறுபறைகண்முழக்கினார்.  (ககூ0)

கூ-வது சிறுதேருருட்டல் நான்காம் வருஷம்.

பறந்தலையினெதிர்ந்தவர்கள் பன்மணித்தேர்புறங்கொடுப்ப
மறந்தழையுமணிநெடுந்தேர்வல்லையுகைத்திடற்குரியார்
பிறந்தகதிர்க்குலத்தினுக்குப்பெரிதும்ஃதியைவதெனச்
சிறந்தசிறுவர்களொடும்போய்ச்சிறுதேரங்குருட்டினார். (ககூக)

வித்தியாரம்பஞ் செய்வித்தல்.

ஸ்ரீத்தகையவிளையாட்டினியல்பொழியவைந்தாண்டிற்
பைத்தநெடுங்கடலுலகம்பரிக்குமொருசுபதேவன்
மெத்தியபேருவகையனுய்விழுத்தகுமங்கலஞ்சிறப்பப்
பொத்துமெழிற்கலைமகளைப்புணர்வித்தான்மகனார்க்கு. (ககூஉ)

அரசர்க்குரிய ஆயுதப்பரிட்சையும், யானையேற்றம், குதிரையேற்றம்,
இரத நடத்தல் - பழகினமை.

சின்னாளிற்பயில்கலைகள்செயிர்தீரமிசப்பயின்று
பின்னார்வத்தொடும்படையின்பெருங்கடலைக்கரைகடந்து
துன்னார்கள்குடர்குழம்பத்துரகதமுங்கடகளிறும்
பொன்னார்திண்மணித்தேரும்பொருதிறத்தினுகைத்திட்டார். (ககூங)

இது முதல் (சங) செய்யுள் கதை.

ஓங்குமுபாயகவினையொருபதிற்றாண்டினிற்பெற்று
வீங்குமறைநான்குமோதிவிழுத்தகைமையொழுக்கெய்திப்
பாங்குபெறும்பதினாறாண்டினில்வதுவையயின்றுலகந்
தாங்குமுறைமையும்பெற்றார்தறுகண்வினைப்பவமற்றார். (ககூச)

மண்ணுலகஞ்செங்கோலின் மலிவெய்தவேள்விகளால்
விண்ணுலகமலிவெய்தவேத்தவையின்வீற்றிருந்து
நண்ணலர்கள்பணிகேட்பநவையனைத்துநலிந்தொழியப்
புண்ணியமெங்கணும்வளரப்புகழரசுபுரிகாலை. (ககூசு)

விளையாடும்பருவத்தும்வெண்ணாவல்வீற்றிருந்
வளையாமெணிநாகத்தகலத்தார்திருவடியே
யுளநாடிவருமவர்தாமோங்கியமுற்பவத்தினைக்கே
யளவாததிருப்பணிகளாக்குதற்குமனம்வைத்தார். (ககூஎ)

படிநெளியுநாற்படையும்பரப்பியெழுந்தடையலர்த
முடிகளொடுமுடிபுரளமொய்யமரினுயிர்பருகிக்
கடிகெழுபல்வளங்கவர்ந்துகழலடைந்தோர்திறைவாங்கி
படிவில்பொருளொடுநாவலவனத்தினைமுற்றினர்பாமோ. (ககூஅ)

வேறு.

முந்தியபவந்தொறுமுற்றிநின்றதோர் சிந்தையன்புமிக்காரநாவலின், கந்
தென்னிழலிற்கலந்துளார்பதஞ் சிந்தைசென்றிறகுறச்சென்றுதாழ்ந்தனர்

திருவுருநோக்கினர்சேவகளிருக, வுருகினர்குழைந்தனருலப்பிலான
ந்தம், பருகினர்மறைபலபாடியாடினர், பெருகியவன்பொடும்பெயர்ந்துசூ
ழ்ந்தனர். (ககூகூ)

அரிதவணகன்றகிலாண்டவல்லிதன் பரிபுரச்சீறடிபணிந்துபோற்றினார்,வ
ரியளிமுரலுமவ்வனத்திலோர்சிறை, புரிமைசெய்பரிசனத்தோடும்வைகி
னார். (உ00)

சூழ்ச்சியின்மிகுந்தவர்தொகுப்பநோக்குபு, வாழ்ச்சிவெண்ணாவலின்ம
ருவினார்க்கிவண், டாழ்ச்சியில்பொருளெலாந்தயங்குமாலயம், வீழ்ச்சியு
வினைஞரால்விதிக்கவென்றனர். (உ0க)

அருடலைக்கொண்டசென்றமைச்சராதியோ, ருருவளருமேலாகமிக்கு
ருக்குவாரையும், குருமணித்திரள்களைக்குயிற்றுவாரையுந், தருகவென்றே
வினர்வியவர்தங்களை. (உ0உ)

வியவருமவினைஞரைவிளிப்பவேகினார், நயவருமிரவிபுரவலைசென்ற
தாங், கயர்வுறுமாலையுமகத்ததவ்விராக், கயவுரிப்போர்வையார்கனவிற்
சொல்லுவார். (உ0ங)

அடியவர்வேடமோடடுத்தநாயகர்.முடிகெழுவேந்தனைமுகத்துநோக்குபு,ப
டிமுழுதாள்பவபணிபொன்றுதியான்,மிடியறச்செய்வதுவேட்டுகின்றனை.

வேட்டவவ்வுளத்தினைவிடுதிவிண்ணவர், நாட்டுளதச்சன்முனண்ணி
நம்முழை,வாட்டமினிருமிதவரங்கொண்முன்னரே, கோட்டமிலாலயங்கு
யிற்றவெண்ணினான். (உ0ச)

மேவியகெண்டகைவிலங்கற்சாரலிற், பாவியகெண்டகைநதியின்பா
ங்கரிற், றாவிகைவிமானந்தன்றொடிக்கையாலிழைத், தோவிலன்பாலிவ
ணுறுத்தலுக்கினான். (உ0ரு)

ஆங்கவற்கதனையவ்வாற்றினிட்டுநீ, நீங்குகென்றுமதுகெழ்த்தியன்னவன் பாங்குறுமித்தலப்படர்ந்துமாதவர், தாங்கிநன்னிருமித்ததலைமைபூண்டனன் (௨0௭)

ஆதலினுங்குநீயடுத்திட்டவ்வயிற், கோதறுமுருத்திரர்கோடியோர்குழீஇ மேதகுபூசனைவிளைத்துப்போற்றிய,நாதருமுளரவர்தம்மைநண்ணுதி(௨0௮)

முன்னவரருளினன்மொழிந்தவாறுநீ, பின்னதுதனையிவட்பெயர்த்துவையென, நகினயமொழியினனவின்றுநீங்கினர்,சொன்னவைநனவென (௨0௯)

விடிந்தபினமைச்சரைவிளித்துமற்றிவண்,முடிந்ததுமுதல்வனுரருளி தென்றவர், தொடர்ந்தவர்நால்வகைச்சேனைசூழ்தரப்,படர்ந்தனர்வடமுகம்பார்த்துவேந்தனர். (௨௧0)

கலைச்செழுங்கரத்தவர்களைந்நகெண்டகைசசிலைத்தலைநகியினைசசேர்ந்துபாங்கரி, னிலைத்தநின்னடிகரிலவந்தனை, நலத்தகப்புரிந்துசின்னுளங்குற்றனர். (௨௧௧)

மூந்திடத்தெய்திமுக்கண்ணர்கூறுவா, ரிந்திடத்துளதல்லெடுத்துமீட்டுமிங், குந்திடத்துறுகெனவுறுத்திசசென்மதி, யந்திடத்துறுமெனவருளிப்போயினர். (௨௧௨)

அயிலுறுசூற்படையமலர்கூறலும்வெய்யுறுபூணுடைவேந்தனர்மணி, பயிலுறுநதியிடைப்படிந்துநேருறக், கயிலையைநேர்விமானத்தைக்கண்டனர். (௨௧௩)

புரையறுசிற்பநூல்புகன்றவாற்றினல், வரையெனவிலகியவிமானம்வல்லையே, கரைமிசையேற்றினர்கணமேமீட்டுமவ், விரைநதியிட்டனர்மேவுகாதலின். (௨௧௪)

விமலனையாயிடைமீட்டும்போற்றினர்,தமதிருஞ்சேனையுந்தாமுமீண்டுசென், றிமையவரோத்திபநகரையெய்தினர், ரமுதலிங்கேசனையன்பிற்போற்றினர். (௨௧௫)

வேறு.

திரைதவழ்பொன்னிசார்ந்துசெங்கணர்நிற்பவாக்குக்
கரையர்முன்வடாதுதிக்கினமரொருதடத்தின்மூழ்கி
விரையவையாற்றுப்பொய்கைமீமிசையெழுந்தாலென்ன
விரைபுனற்பொன்னிநாப்பனெழுந்ததுவிமானமம்மா. (௨௧௬)

புற்புதமெழுந்தாலென்னப்புனலிடைவிமானந்தோன்றத்
தற்பரன்சரணமன்றிச்சார்புறுத்தலைமைமன்ன
ரற்புதவுளத்தராஞைரமரருமிறும்பூதுற்றார்
சொற்பயில்புவியினேருந்தோல்வியின்மகிழ்ச்சிபூத்தார். (௨௧௭)

அடியவர்தமக்கெய்தாதவரும்பொருள்யாதொன்றில்லை
கடியெழுகாவனீழற்கண்ணுதலருளினலே
படிமிசையெவருங்காணப்பரந்தசெண்டலைகநீராற்றி
னிடையிலைபொன்னியாற்றினெழுந்துமேல்விளங்குமென்றுல். (௨௧௮)

